# சித்தர் சிவவாக்கியர்

அழகப்பா பல்கலைக்கழகத்தில் தமிழில் முனைவர் (Ph.D)
பட்டத்திற்காகப் பகுதிநிறைவாக அளிக்கப் பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**அ.பாண்டியன்**

பதிவு எண்: 0266

ஆய்வு நெறியாளர்

முனைவர் **வெ.திருவேணி**






**தமிழ்த்துறை**
**அழகப்பா பல்கலைக்கழகம்**
**(தேசிய தர மதிப்பீட்டுக் குழுவின் 'A' மதிப்புப் பெற்றது)**
**காரைக்குடி 630 003**
**தமிழ்நாடு**
**இந்தியா**


**டிசம்பர் 2012**

முனைவர் **வெ.திருவேணி**, M.A., M.Phil., Ph.D.
உதவிப் பேராசிரியர் & நெறியாளர்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

# நெறியாளர் சான்றிதழ்

**“சித்தர் சிவவாக்கியர்”** என்னும் தலைப்பில் **அ.பாண்டியன்** அவர்கள் செய்துள்ள இவ்ஆய்வேடு அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் முனைவர் (Ph.D) பட்டத்திற்காக இவரின் சொந்த முயற்சியால் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**(வெ. திருவேணி)**
நெறியாளர்

நாள் :

இடம் : காரைக்குடி

**அ. பாண்டியன்,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

# ஆய்வாளர் உறுதிமொழி

**"சித்தர் சிவவாக்கியர்"** என்னும் தலைப்பில் காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்தில் முனைவர் (Ph.D) பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்ஆய்வு என் சொந்த முயற்சியால் உருவானதாகும். இவ்ஆய்வேடு இதற்குமுன் எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்காகவும் அளிக்கப் பெறவில்லை என உறுதி கூறுகிறேன்.

ஆய்வாளர் கையொப்பம்

**(அ.பாண்டியன்)**

நாள் :
இடம் : காரைக்குடி

உறுதிக் கையொப்பம்

# நன்றியுரை

முனைவர்ப்பட்ட ஆய்வாளராக என்னை ஏற்றுக்கொண்டு சித்தர் சிவவாக்கியர் பற்றி ஆய்வு செய்ய அனுமதி அளித்த அழகப்பா பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர், பேராசிரியர், முனைவர் சேது,சுடலைமுத்து அவர்களுக்கு எனது நன்றியைத்தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர்ப்பட்ட ஆய்வாளராக ஏற்றுக் கொண்ட அழகப்பா பல்கலைக்கழகத்திற்கு எனது நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

அன்பும் அக்கறையும் கொண்டு எனது ஆய்வுப் பணிக்குத் தேவையான உதவிகளை அவ்வப்போது செய்து தந்த அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் முனைவர் மு.பாண்டி அவர்களுக்கு எனது நன்றி.

ஆய்வு மேற்கொள்ள உந்துதலாக அமைந்ததுடன் ஆக்கமும் ஊக்கமும் தந்துதவி தாய்மையன்புடன் வழிநடத்தித் தக்கமுறையில் இவ்வாய்வினைச் செழுமைப்படுத்தி உதவிய எனது ஆய்வுநெறியாளர் முனைவர் வெ.திருவேணி அவர்களுக்கு எனது நன்றியைப் புலப்படுத்தி அமைகிறேன்.

இவ்வாய்வுப் பணி சிறக்கப்பெரிதும் உதவிய பேரன்பினரும், அழகப்பா பல்கலைக்கழகத்துணைப்பதிவாளருமாகிய முனைவர் கி.காளைராஜன் அவர்களுக்கு என்றும் எனது நன்றி உரியது.

மேலும், தமிழ்த்துறைப் பேராசிரியப்பெருமக்கள், இளமுனைவர், முனைவர்ப்பட்ட ஆய்வு மாணவ,மாணவியர், மற்றும் அலுவலகப் பொறுப்பாளர்கள், நூலக அன்பர்கள், களஆய்வின்போது தக்க

தகவல்கள் தந்துதவிய தகவலாளர்கள், ஆகிய அனவருக்கும் எனது நன்றி உரியது.

இந்த ஆய்வேட்டினைக் கணினி அச்சுச் செய்து தந்துள்ள கபிலன் பதிப்பகம் திரு. சொ.அருணன் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்ஆய்வு சிறப்புற அமைந்திடத் தொடர்ந்து தூண்டுதல் புரிந்த சிங்கம்புணரி சித்தர் அருள்மிகு முத்துவடுகநாத சுவாமிகள், ஞானபிதா சுவாமி சிவானந்த பரமஹம்சர், ஸ்ரீமகா அவதார் பாபாஜி, ஸ்ரீசாய்பாபா ஆன்மிக அருளன்பர்கள் அனைவருக்கும் எனது பணிவான நன்றி.

இவ்ஆய்வேடு உருவாவதற்கு உடனிருந்து உதவிகள் புரிந்த எனது குடும்பத்தினராகிய, தம்பி திரு. அ.சுருளியப்பன், மற்றும் இவரது துணைவியார் திருமதி. ஜானகி சுருளியப்பன், எனது மைந்தர்களான திரு. அ.பா.அச்சுதன், திரு. அ.பா.அறிவொளி ஆகியோருக்கும், எனது மருமக்களாகிய திருமதி. கீதாலெட்சுமிஅச்சுதன், திருமதி. புனிதா அறிவொளி ஆகியோருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும், இவ்ஆய்வு சிறக்கப் பேருதவி புரிந்த அனைத்துப் பெருமக்களுக்கும் எனது நன்றி உரித்தாகுக.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | | |
|---|---|---|---|
| 1. | தொ.ஆ . | - | தொகுப்பு ஆசிரியர் |
| 2. | ப.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| 3. | மு.ப.ஆ. | - | முதன்மைப் பதிப்பு ஆசிரியர் |
| 4. | மு.ப. | - | முதற்பதிப்பு |
| 5. | இ.ப. | - | இரண்டாம்பதிப்பு |
| 6. | ப. | - | பக்கம் |
| 7. | பக். | - | பக்கங்கள் |
| 8. | மேலது. | - | மேற்குறிப்பிட்ட நூல் |
| 9. | மொ.பெ.ஆ. | - | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| 10. | உ.ஆ | - | உரை ஆசிரியர் |
| 11. | பா.எண் | - | பாடல் எண் |
| 12. | P. | - | Page |
| 13. | pp. | - | Pages |

# உள்ளடக்கம்

# முன்னுரை

தமிழக வரலாற்றின் தொடக்கக் காலத்தில், சமயம் என்னும் அமைப்பில்லாமல் திணைநிலைத் தெய்வங்களை மக்கள் வழிபட்ட நிலை இருந்தது. பின்னர், சமயம் ஒரு சமுதாய அமைப்பாக வளர்ச்சி பெற்றது. இதன் தொடர்ச்சியாகச் சமுதாயத்தில் பல சமயங்கள் தோன்றிச் செல்வாக்குப் பெற்று விளங்கியதைத் தமிழ் இலக்கியங்கள்வழி அறிய முடிகின்றது. அக்காலப்பகுதியிலும், அதனைத் தொடர்ந்த காலப்பகுதியிலும், சமயங்களுக்கிடையே உயர்வு தாழ்வு அடிப்படையில், கருத்து மாறுபாடுகளும் பூசல்களும் உருவாயின.

மனித சமுதாயம், சமயத்தால் ஒன்றுபட்டு வாழ்வதற்குப் பதிலாகத் தமக்குள் பூசலிட்டு மடிவதைக் கண்டு, சமயம் கடந்த சான்றோர் சிலர் இத்தகு பூசல்களுக்கு முடிவுகாண முயன்றனர். அப்பெருமக்கள், மக்கள் அனைவரும் சமம், இறைவன் ஒருவனே, அவனை வழிபடுவதற்கு வெற்றுச் சடங்குகள் வேண்டா, வாய்மையும் தூய்மையும் நிறைந்த உள்ளச் செம்மையே உகந்தது என்னும் கருத்துக்களைப் புகட்டினர். அத்தகைய சான்றோர்களுள், தமிழ்நாட்டுச் சித்தர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்கள், சமயம், கடவுள் வழிபாட்டுமுறை ஆகியவை குறித்த புதிய சிந்தனைகளை வெளியிட்டனர். அவ்வகையில் இவர்களைச் சமயத்துறையில் தோன்றிய புரட்சியாளர்கள் எனலாம். தமிழ்நாட்டில் சித்தர்களை, ‘பதினெண்சித்தர்கள்’ என்று தொகைப்படுத்திக் கூறும் மரபு உள்ளது. இப்பதினெண் சித்தர்களுள் ஒருவராகச் சிவவாக்கியர் திகழ்கிறார். அவர் இயற்றிய பாடல்கள் சிவவாக்கியம் என்று பெயர் பெறுகின்றன.

## ஆய்வுத் தலைப்பு

சிவவாக்கியர், தாம் வாழ்ந்த காலத்தில் நிலவிய சமய, சமூகக் கேடுகளைக் களைவதிலும் மக்களுக்கு உண்மை அறிவை ஊட்டுவதிலும், ஈடுபாடுகொண்டு இலக்கியம் படைத்தார். அவரது நூலான சிவவாக்கியத்தின் வழி வெளிப்படும் அவர்தம் சமயம், கடவுள், சமூகம் தொடர்பான சிந்தனைகள் அனைத்தும், '**சித்தர் சிவவாக்கியர்**' என்னும் தலைப்பின்கீழ் ஈண்டு ஆராயப்படுகின்றன.

## ஆய்வுநோக்கம்

தமிழ் இலக்கியம், காலந்தோறும் பல்வேறு தளங்களில் வளர்ச்சி பெற்று வந்திருக்கின்றது. அவற்றுள், சமயஇலக்கியம் ஒரு பெரும்பிரிவாக அறியக்கிடைக்கின்றது. அவற்றினைப் பெரிதும் வளர்த்தெடுத்த பெரியோர்கள், சாத்திரங்களாகவும், தோத்திரங்களாகவும் வடித்தளித்தனர். அந்தமரபில் கிளைத்த மற்றொரு பிரிவாகச் சித்தர் இலக்கியம் பரிணாமம் பெற்றது. சித்தர்கள், சமயம் கடந்து, யோகம், ஞானம், ஆகியவற்றோடு, மருத்துவம், மந்திரம், சோதிடம், இலக்கியம், இரசவாதம், உள்ளிட்ட பாடுபொருள்களில் சமுதாய மேம்பாட்டுக்கான பணிகளைத் தமது நூல்கள்வழி வெளிப்படுத்தத் தொடங்கினர். மக்கள்பழகு தமிழில் எழுதப்பட்ட இவ்விலக்கியத்தின் எளிமையும், நுட்பமான யோக, தத்துவச் செறிவையும் கொண்ட இவ்விலக்கியங்களை, முறைப்பட ஆய்ந்து வெளிப்படுத்துவதில் சில சிக்கல்கள் எழுந்தன. காரணம், மேலோட்டமாக, அறியப்பெறும் ஒரு பொருளுக்குள்ளே நுண்பொருள் உணர்த்தும் யோகநெறி துலக்கமாவதை அறிந்து விளக்கம் தருவதிலும், அவற்றைப் புரிந்துகொள்வதிலும் சில தகுதிப்பாடுகள் இன்றியமையாததாகின்றன. இலக்கண, இலக்கியப் புலமை கடந்து, சித்தர் மரபும் யோக அனுபவமும் கொண்டு அணுகும்போது மட்டுமே அறியலாகும் உண்மைகளைச் சிவவாக்கியர் பாடல்கள் தாங்கிநிற்கின்றன.

எனவே, சிவவாக்கியர் கூறும் மூச்சுக்கலை பற்றிய வாசியோகத்தில் இவ்ஆய்வாளருக்கு உள்ள நேர்முகப்பயிற்சியின் காரணமாகவும், தொடர்ந்து சித்தர்களைப் பற்றிக் களஆய்வு மேற்கொண்டு வரும் அனுபவத்தின் தொடராகவும், சிவவாக்கியர் பற்றிய புதிய புரிதல்களையும் விளக்கங்களையும் கண்டு, தெளிந்து, காட்டவேண்டி இவ்ஆய்வு நிகழ்த்தப்படுகின்றது.

### *ஆய்வுஎல்லை*

1948ஆம் ஆண்டில் வ.சரவணமுத்துப்பிள்ளை பதிப்பித்துள்ள ‘பதினெண்சித்தர்கள் பெரிய ஞானக்கோவை’ என்னும் நூலின் முதற்பாகத்தில் அமைந்துள்ள, சிவவாக்கியர் பாடல் என்ற தலைப்பின்கீழ் உள்ள 520 பாடல்களும், இவ்ஆய்வின் மூலச் சான்றுகளாக அமைகின்றன. இப்பதிப்போடு கீழ்க்காணும் பிற பதிப்புகளுடன், பாடல் எண்ணிக்கையில் மட்டும் ஒப்பிட்டு ஆராயப்படுகின்றன.

- சித்தர்பாடல்கள்- அரு.ராமநாதன்- 1963- பிரேமா பிரசுரம்- சென்னை- 526.
- சிவவாக்கியர் பாடல்கள்- வடிவேலுமுதலியார்(உ.ஆ)- 1970- அருந்ததி பதிப்பகம்- சென்னை-7- 519.
- சித்தர்பாடல்கள்- த.கோவேந்தன்- பூம்புகார் பிரசுரம்- சென்னை- 1976- 511.
- சிவவாக்கியர்- புலவர்.இரா.இளங்குமரன்- கழகவெளியீடு சென்னை- 1984- 510.

மேற்கண்ட பாடல்கள் ஆய்வின் எல்லைகளாக அமைகின்றன.

## *கருதுகோள்*

- அ. சிவவாக்கியர் ஒருவரா?பலரா?
- ஆ.சிவவாக்கியர் சைவரா? வைணவரா?
- இ. சைவராக இருந்து வைணவராக மாறினாரா? அல்லது வைணவராக இருந்து சைவராக மாறினாரா?
- ஈ. சிவவாக்கியரும் திருமழிசையாழ்வாரும் ஒருவர்தாமா?
- உ. சிவவாக்கியர் காலம் எது?
- ஊ.சிவவாக்கியருக்குச் சிலையோ, கோயிலோ, குகையோ, கல்வெட்டுகளோ எங்கேனும் உண்டா?
- எ. சிவவாக்கியர் வற்புறுத்தும் நெறி யோகநெறியா? பக்தி நெறியா?
- ஏ. சிவவாக்கியர் பாடல்களில் பொதிந்துள்ள சைவசித்தாந்தக் கூறுகளின் தன்மை எத்தகையது?
- ஐ. சிவவாக்கியர் பாடல்களில் புலப்படும் சமய, சமுதாயச் சிந்தனைகள், இலக்கியக்கூறுகள் பற்றித் தெளிவுறுத்தல்.

ஆகியவற்றைக் கண்டுதெளிவது, இவ்வாய்வின் கருதுகோள்களாக அமைகின்றன.

## *சான்றாதாரங்கள்*

பதினெண்சித்தர்பாடல்கள் என்னும் பெரியஞானக்கோவை நூலில் உள்ள சிவவாக்கியரின் படைப்பான 520 பாடல்களும் இவ்ஆய்விற்கு முதன்மைச் சான்றாதாரமாகும். சிவவாக்கியர் பாடல்கள் தொடர்பான திறனாய்வு நூல்களும், ஆய்வேடுகளும், இதழ்களும், கட்டுரைகளும், உரிய கள ஆய்வுகளும் துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

## *முன்ஆய்வுகள்*

சித்தர்பாடல்கள் பற்றிய ஆய்வுகள், இவ்ஆய்விற்கு முன்னோடிகளாக அமைகின்றன. அவற்றுள், தத்துவப்பேராசிரியர் முனைவர் க.நாராயணன் எழுதிய, 'சித்தர் சிவவாக்கியர் நூல்' ஆய்வு முன்னோடியாக அமைகின்றது.

## *ஆய்வு அணுகுமுறைகள்*

சிவவாக்கியர் பாடல்களை, வரலாற்றுஆய்வுமுறை, பகுப்பாய்வுமுறை, விளக்கவியல் ஆய்வுமுறை, சமூகவியல் ஆய்வுமுறை, ஒப்பாய்வுமுறை ஆகிய, ஆய்வு அணுகுமுறைகளில் அணுகுவதாக, இவ்ஆய்வேடு அமைகிறது. சிவவாக்கியர் காலம், வாழ்க்கைச்சூழல், ஆகியவற்றை வரலாற்று ஆய்வுமுறையிலும், சிவவாக்கியரின் செயல், இயல்பு, இலக்கண வரையறை, இலக்கியச் செழுமை குறித்தவற்றை பகுப்பாய்வு முறையிலும், ஆய்வதாக இவ்ஆய்வேடு அமைகின்றது. தேவையான இடங்களில், களஆய்வில் பெற்ற உண்மைகளும் இவ்ஆய்வில் சுட்டப்படுகின்றன.

சிவவாக்கியர் பாடல்களில் புலப்படும் பரம்பொருள், உருவவழிபாடு, மந்திரம், சமயச்சடங்குகள் உள்ளிட்டவற்றைத் தொகுத்தும் பகுத்தும் விளக்கும் இடத்து விளக்கவியல் அணுகுமுறையும், சமய, சமுதாய, இலக்கியச் சிந்தனைகளை ஆராயும்இடத்து, சமூகவியல் ஆய்வுமுறையும், பிற சித்தர்பாடல்கள் மற்றும் இலக்கிய நூல்களோடு ஒப்பிட்டு ஆராயுமிடத்து, ஒப்பாய்வுமுறையும் இவ்ஆய்வேட்டில் பின்பற்றப்படுகின்றன.

## *ஆய்வுப் பகுப்பு*

இவ்ஆய்வேடு, முன்னுரை, முடிவுரை நீங்கலாகப் பின்வரும் ஐந்து இயல்களைக் கொண்டு அமைகிறது.

1. சிவவாக்கியர்

2. சிவவாக்கியர் பாடல்களில் சைவசித்தாந்தக் கூறுகள்.

3. சமயச்சிந்தனைகள்

4. படைப்பாக்க நெறிகள்

5. சமுதாயப்பார்வை

என்பனவாக அமைகின்றன.

## *இயல்களின் விளக்கங்கள்*

முன்னுரையில், ஆய்வுத்தலைப்பு, ஆய்வுநோக்கம், ஆய்வு எல்லை, கருதுகோள், சான்றாதாரங்கள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வுப்பகுப்பு ஆகியவை இடம்பெறுகின்றன.

**இயல் ஒன்று சிவவாக்கியர்**

தமிழ் இலக்கிய ஆய்வுலகில் சித்தர் என்னும் சொல்லாடல் இடம்பெறும் பாங்கு, காலந்தோறும் சித்தர் இயல் வளர்ச்சியுற்ற விதம், பதினெண்சித்தர் பற்றிய ஆய்வு ஆகியவற்றை முன்னிறுத்தித் தொடங்கும் இவ்வியல், சிவவாக்கியர் குறித்து, விரிவாக ஆராய்கிறது.

'சிவவாக்கியர்' என்ற பெயர்க்காரணம், அவர் சார்ந்த சமயம், அவர்தம்வாழ்க்கை வரலாறு, காலம், பற்றிய ஆய்வியல் உண்மைகளையும், கள ஆய்வுகளின் அடிப்படையில் கண்ட உண்மைகளையும் தந்து, சிவவாக்கியர் குறித்த வரையறையைத் தாங்கி நிற்கிறது முதல் இயலாகிய, சிவவாக்கியர் என்பதாகும்.

**இயல் இரண்டு- சிவவாக்கியர் பாடல்களில் சைவசித்தாந்தக் கூறுகள்**

இரண்டாம் இயலானது, வைணவ, சைவ இணைப்பைப் பெரிதும் வலியுறுத்தும் சிவவாக்கியரின் பாடல்களில் வெளிப்படும், சைவசித்தாந்தக்கூறுகளைக் கண்டறிந்து காட்டுவதாக அமைகிறது.

சைவசித்தாந்தத் தத்துவ விளக்கங்களைச் சுட்டி, அவை இடம்பெறும் சிவவாக்கியர் பாடல்களை மேற்கோளிட்டு விளக்கவதாக இவ்வியல் அமைகின்றது.

**இயல்- மூன்று சமயச்சிந்தனைகள்**

சித்தர்நெறிநின்ற சிவவாக்கியர்தம் பாடல்களில் புலப்படும் சமயச்சிந்தனைகளை விளக்கும் மூன்றாம் இயலில், சைவ, வைணவ ஒருமைப்பாட்டுச் சிந்தனைகள், சமயத்தத்துவங்கள் சார்ந்த கருத்துக்கள் விளக்கப்படுகின்றன. சமயப்பூசல் தவிர்த்தும் வாயில்கள் சுட்டப்படுகின்றன.

**இயல் நான்கு இலக்கியக்கூறுகள்**

சிவவாக்கியர் பாடல்களில் துலக்கமாகும் இலக்கியக்கூறுகளை ஆராயும் நான்காம் இயலில், இலக்கிய, இலக்கணக் கூறுகள் கண்டறியப்படுகின்றன. யோகநெறி முழுமையாக மக்களைச் சென்று சேரவேண்டி, இலக்கியநயம் மிளிரப் பாடிய சிவவாக்கியரின் கவியுளம் இவ்வியல் வாயிலாகக் கண்டறியப்படுகின்றது.

மேலும், யாப்பு, பாட்டுமரபு, உவமை, உருவகம் உள்ளிட்ட அணிநலன்கள், சொற்கட்டு, உணர்வுப் பெருக்கு உள்ளிட்ட கூறுகள் தக்க சான்றுகளோடு முன்வைக்கப்படுகின்றன.

**இயல் ஐந்து சமுதாயப்பார்வை**

சிவவாக்கியர், தமது ஆன்ம விடுதலையை மட்டும் எண்ணி வாழ்ந்தவர்அல்லர். வையத்துள் வாழும் மக்கள் வாழ்வாங்கு வாழ, யோகநெறிநின்று வழிகாட்டவும் விழைந்தவர். ஆதலின், சமுதாயத்திற்குத் தேவையான அறக்கருத்துக்களை, ஆன்மிக உணர்வுகளைப் புகட்டவேண்டிப்

பாடல்கள் நல்கியுள்ளார். சமயவழிநின்று இறைமையை உணர வழிகாட்டும் அவர், அவ்வழித்தோன்றிய சடங்குகளின் போலித்தன்மைகளையும், புரட்டுத் தனங்களையும் சாடுகின்றார். வேதியர் பண்பாட்டின் சீர்கேடுகளைச் சுட்டும் அதேநேரத்தில், ஞானநெறியின் உண்மையையும் புலப்படுத்துகின்றார். இல்லறத்தின் மேன்மையையும், பெண்மையின் பெருமையையும், தனிமனித ஒழுக்கத்தையும், சமுதாய நெறிகளையும், உணர்வுபூர்வமாக உணர்த்தும் சிவவாக்கியரின் சமுதாயப் பார்வையை விரிவுறக் கண்டு விளக்கும் இவ்இயல், ஆய்வின் நிறைவு இயலாக அமைகின்றது.

முடிவுரையில், இவ்ஆய்வில் கண்ட உண்மைகள் தொகுத்துத் தரப்படுகின்றன. மேலும், எதிர் கால ஆய்வுக்குரிய கூறுகளை எடுத்துரைக்கின்றது.

ஆய்வேட்டின் இறுதியில், துணைநூற்பட்டியல், தேவையான பின்னிணைப்புகள், களஆய்வின்போது கண்ட நேர்முகங்கள், விளக்கக்குறிப்புகள் தரப்பட்டுள்ளன.

# சிவவாக்கியர்

வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும் நிலையை எய்த முயல்வது, தமிழர்தம் வாழ்வியல் நெறியாகிறது. அவ்வகையில், இறைவனைக் காண முயல்பவரைப் ‘பத்தர்கள்’ என்றும், கண்டு தெளிந்தவர்களைச் ‘சித்தர்கள்’ என்றும் தேவாரம் பாகுபாடு செய்து காட்டுகிறது. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவற்றுள் சித்தம் எனப்படுவது, எண்ணியதைத் திண்ணமாக முடிப்பது. இறைவனை அடைந்தே தீருவது என்ற சித்தமாம் வைராக்கியத்தில், சித்து எனப்படும் உணர்வுடன் கூடி, இறையனுபவத்தில் திளைப்பவர்களே சித்தர்கள் ஆவர். சித்தர்களுள் முதலாமவராகக் கருதப்பெறும் திருமூலர்,

சித்தர் சிவலோக மிங்கே தெரிசித்தோர்
சத்தமுஞ் சத்த முடிவுந்தம் முட்கொண்டோர்
நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர
முத்தர் தமுத்தி முதன்முப்பத் தாறே[1]

என்று சித்தர்கள் பற்றிக் குறிப்பிடுகின்றார். அவரது நோக்கில், சித்தர் என்போர் இப்பிறவியிலேயே சிவலோகத்தைக் கண்டு களித்தவர்கள் ஆவர். தம்முடலிலேயே பரநாத ஒலியின் முடிவையும் கேட்டு அனுபவித்தவர்கள்; என்றும் நிலையாக வாழ்பவர்கள்; குற்றமில்லாதவர்கள்; நல்வினை, தீவினைகளில் இருந்து நீங்கியவர்கள்; மேலான முக்தியை அடைந்தவர்கள்; முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்த பெருமை உடையவர்கள், சித்தர்கள் ஆகிறார்கள்.

சித்தர்கள் மரணமில்லாப் பெருவாழ்வைப் பெற்றவர்கள்; தம் உடம்பை வைத்துவிட்டு, உயிரற்ற மற்றோர் உடம்பிலே புகுந்து நடமாடும் ஆற்றல்

பெற்றவர்கள்; மூன்றுகாலங்களையும் அறிந்தவர்கள். அவர்கள், உலகம் முழுவதிலும் உள்ள நடப்புகளை, இருந்த இடத்திலிருந்தே அறியும் ஆற்றல் பெற்றவர்கள். ஆன்மிகம் கலந்த அறிவியல் முன்னோடிகளாகத் திகழும் அவர்கள், பல கலைகளும் வெளிப்படக் காரணமானவர்களாக விளங்குகின்றனர். வானசாத்திரம், சோதிடம், மருத்துவம், இரசாயனம், மந்திரம், தந்திரம், எந்திரம், யோகம், ஞானம் உள்ளிட்ட பல துறைகளுக்கும் அளவற்ற தொண்டு செய்தவர்கள் சித்தர்கள் ஆவர்.

இதுகருதியே, சித்தர்கள் என்ற சொல்லுக்கு, சாமி. சிதம்பரனார் பின்வருமாறு விளக்கம் அளிக்கிறார்: 'சித்' என்பதற்கு, அறிவு என்பது பொருள். சித்தர்கள் என்றால் அறிவு படைத்தவர்கள்; அறிஞர்கள்; மேதைகள்; பேரறிவு படைத்தவர்கள்; நுண்ணறிவு படைத்தவர்கள்; விஞ்ஞானிகள்; மெய்ஞ் ஞானிகள் என்று பொருள் கொள்ளுவதே பொருத்தமாகும்"[2]

மேலும், "சித்தர்கள் மதவாதிகளோ, வைதீகர்களோ, சுயநலம் கொண்டவர்களோ அல்லர். மனிதாபிமானிகள்; பகுத்தறிவுவாதிகள்; தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்கள் ஆவர். உலக உயிர்களின் இம்மை, மறுமை வாழ்வு நன்முறையில் அமைய, உண்மைநெறியினைக் காட்ட வேண்டும் என்பதைத் தமக்குரிய கடமையாகக் கொண்டு வாழ்ந்த பெருமக்கள்"[3] என்றும் குறிப்பிடுவர்.

இத்தகு சித்தர்கள் எந்த ஒரு காலக்கட்டத்திற்கும், நிலஎல்லைக்கும் மட்டுமே உட்பட்ட ஒரு கூட்டத்தினர் அல்லர். எல்லாக் காலங்களிலும், எல்லா நாடுகளிலும், அந்தந்தச் சூழலுக்கேற்றவண்ணம், சித்தர்கள் தோன்றி வாழ்ந்திருத்தல் கூடும். அந்தவகையில், நாடு, இனம், மொழி, சமயம் இவற்றிற்கேற்ப, வெவ்வேறு சொற்களாலும் பெயர்களாலும் அவர்கள் அடையாளப்படுத்தப்பட்டாலும் அவர்களுடைய பண்புகள் பெரும்பாலும் ஒத்திருப்பதைக் காணமுடிகிறது. இவர்களுள் இந்தியச் சித்தர்கள் பற்றிய அறிமுகம் பின்வருமாறு அமைகிறது.

## இந்தியச் சித்தர் மரபு

இந்தியாவின் வடபகுதியில் வாழ்ந்த சித்தர்கள், ‘நவநாதர்கள்’ என்று அழைக்கப்பட்டனர். பிற்காலச்சித்தர்கள் நவநாதச்சித்தர்களையும், எண்பத்து நான்கு சித்தர்களையும் வழிபட்டனர்.[4] இவ்வாறு வடஇந்தியாவில் நவநாதசித்தர்கள் என்ற வழக்கு நிலவுவதுபோல, தமிழகத்தில், ‘பதினெண் சித்தர்கள்’ என்ற மரபு நிலவியிருக்கிறது.

வடஇந்தியச் சித்தர்கள், கூட்டங்கூட்டமாக வாழ்ந்தனர். தீட்சையளித்தும், சடங்குகள் செய்தும், புதியவர்களைத் தம் கூட்டத்தில் சேர்த்தும் கொண்டனர். அச்சித்தர் கூட்டம் ஓர் இயக்கமாக இயங்கிற்று. ஆனால், தமிழகச் சித்தர்கள், ஓர் இயக்கமாகச் செயல்பட்டதாகக் கருத முடியவில்லை. ஆனால், குரு-சீடர் மரபு இருந்திருக்கிறது. எனினும், எந்த ஒரு நிறுவனத்தையோ, அமைப்பையோ அவர்கள் அமைத்துக்கொண்டு இயங்கவில்லை.

“சித்தர்கள் பலரும் ஒத்த கொள்கையுடையவர்தாம். ஆனால், தனித்தன்மைகளை இழந்துவிட்டுக் குழுத்தன்மைகளைப் போர்த்துக்கொண்ட மந்தைகளாக இவர்கள் இல்லை. சித்தர்கள் ஒருவருக்கொருவர் தைரியமாகவும், நேர்மையாகவும் முரண்படுகின்றனர்”[5]

எனவே, தமிழகச் சித்தர்கள், எந்த ஒரு கொள்கையின்கீழும், கூட்டமாகவோ, இயக்கமாகவோ ஒருங்கிணைந்து செயல்படவில்லை என்றே எண்ணமுடிகிறது. தத்தம் அனுபவ உண்மைகளை உரிமையோடு கூறும் தனிமனிதர்களாகவே சித்தர்கள் வாழ்ந்திருக்கக்கூடும் என்று துணிய இடமுண்டு. மேலும், சித்தர்களின் இருப்பையும் சிறப்பையும் தமிழ் இலக்கியக்களம் காலந்தோறும் பதிவுசெய்தே வந்திருப்பதையும் அறியமுடிகிறது. தமிழின் தொன்மைவாய்ந்த இலக்கியமாகிய சங்க இலக்கியத்திலிருந்து தேடுதல் இன்றியமையாததாகிறது.

## சங்க இலக்கியத்தில் சித்தர்

'சித்தர்' என்ற சொல்வழக்கு, பழந்தமிழ் இலக்கியங்களில் இல்லையென்றாலும், சித்தர் என்ற சொல்லுக்கான பொருளை உணர்த்தும் பிறசொற்கள் சங்ககால இலக்கியங்களில் காணப்படுகின்றன. தொல்காப்பியத்திலும்,[6] திருக்குறளிலும்[7] பயின்றுவரும், 'நிறைமொழி மாந்தர்' என்ற தொடர், சித்தர்களைக் குறிப்பதாகக் கொள்ளலாம். தொல்காப்பியத்தொடருக்கு, உரை கூறுகையில், "சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டும், குறைவின்றிப் பயக்கச் சொல்லும் ஆற்றலுடையார்" என்கிறார் பேராசிரியர். திருக்குறள் தொடருக்கு உரைகூறும் பரிமேலழகர், "நிறைமொழிமாந்தர் என்பது, அருளிக் கூறினும், வெகுண்டு கூறினும், அவ்வப்பயன்களைப் பயந்தே விடும்" என்கிறார். உரையாசிரியர்கள் தரும் விளக்கத்தின் அடிப்படையில், 'நிறைமொழி மாந்தர்' என்ற தொடர், சித்தர்களைக் குறிக்குமெனக் கருதலாம்.

புறநானூற்றுப்பாடலில் இடம்பெறும், 'திறவோர் காட்சி'[8] என்ற தொடர், சித்தர் அனுபவம் என்று குறிப்பதாகக் கொள்ளலாம். இத்தகைய திறவோர் எனப்படுவர், முக்கால நிகழ்வுகளையும், தம்அகத்திலே காணும் ஆற்றல் உடையவர்கள்; உலகியல் இன்பதுன்பங்கட்கான உண்மைக்காரணத்தை அறிய வல்லவர்கள். இன்னோர்தம் அகக்காட்சியில் உலகியல் அறிவும், உயிர்அறிவும் தெளிவுபடும்.

'சித்து' எனப்படும் இயற்கைமீறிய அற்புதச்செயல்களைப் பற்றிய குறிப்பு, குறுந்தொகைப் பாடலில் காணப்படுகிறது. இப்பாடலுக்கு விளக்கம் நல்கும் உரையாசிரியர், இப்பாடலில் குறிக்கப்படும் ஆற்றல்களும், இயற்கை கடந்த மீவியல் செயல்களுமான, 'பூமியைத்தோண்டி உள்ளே புகுதல், ஆகாயத்தின்கண் ஏறுதல், கடல்மேல் காலால் நடத்தல்' ஆகியவற்றைச் 'சித்து' என்ற சொல்லால் குறிக்கின்றார்.[9]

## காப்பியங்களில் சித்தர்

சங்கம் மருவிய காலத்தில் எழுந்த இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரத்தில் சில இடங்களிலும், மணிமேகலையில் பல இடங்களிலும், 'சித்து', 'சித்தம்', 'சித்தன்' ஆகிய சொற்கள் பயின்று வருகின்றன.

சிலப்பதிகாரத்தில், 'சித்தி' என்ற சொல், 'விரும்பியதைப் பெறுதல்' என்னும் பொருளில் இடம்பெறுகிறது.[10] சமணர் வணங்கி வழிபடும் அருகனின் புகழ்பாடுவதாக அமைந்துள்ள தொடரில் வரும் 'அறிவன்', 'அறவோன்', 'அறிவு', 'வரமிகுந்தோன்', 'செறிவன்', 'சித்தன்', 'பகவன்', 'பொருளன்', 'புனிதன்', 'புராணன்', 'தத்துவன்', 'சாதுவன்', 'சாரணன்', 'காரணன்'[11] என்ற சொற்கள் அருகக் கடவுளைக் குறிப்பதாக அமைந்துள்ளன. 'சித்தன்' என்ற சொல்லுக்கு, 'செய்ய வேண்டுவனவற்றைச் செய்து முடித்தவன்', 'கன்மங்களைக் கழுவியவன்', 'எண்வகைச் சித்துகளையும் உண்டாக்கியவன்' என்றவாறு பொருளுரைக்கின்றனர்.[12]

மணிமேகலைக் காப்பியத்துள், 'சித்தம்' என்ற சொல், பல பொருள்களில் கையாளப்படுகிறது. 'உறுதி', 'நிச்சயம்' என்ற பொருளிலும்[13] மூலப்பொருளாகிய 'பிரகிருதி' என்ற பொருளிலும்,[14], 'மனக்கொள்கை' என்ற பொருளிலும்,[15] இச்சொல் வழங்கப்படுகிறது. நிலத்தில் மூழ்கிக் குளிப்பதும், நீண்ட வானில் உயர்ந்து செல்வதும், கடலில் நடப்பதும், சாரணர்ச் செயல்கள் என்று கூறப்படுகின்றன.[16] 'இச்சாரணர்கள் நீரிலும், பூமியிலும், வானிலும் எண்ணியபொழுது மறையும் ஆற்றல் உடையவர்கள்' என்றும் கூறப்படுகிறது.[17] இதுபோன்ற அற்புதச் செயல்கள் பெருங்கதையிலும் குறிக்கப்படுகின்றன.[18]

## திருமந்திரத்தில் சித்தர்

சைவத்திருமுறைகளில், பத்தாம் திருமுறையாகத் திருமந்திரம் விளங்குகிறது. யோகம், யோகவகை, உறுப்புகள், எண்பெரும் சித்துகள்,

ஞானம் என்பன பற்றி விரிவாகக் கூறும் முதல் தமிழ்நூல், திருமந்திரம் ஆகும். இக்காரணம் பற்றியே, திருமூலரைத் தமிழகச் சித்தர் மரபின் தலைவராகவும், முதல்வராகவும் குறிக்கும் வழக்கு தமிழகத்தில் நிலவுகிறது. திருமூலர், சிவனை, 'சித்தன்' என்றும், சிவநெறி பற்றிய சீவன் முக்தர்களை, 'சித்தர்' என்றும் குறிக்கிறார். திருமந்திரத்தில் சித்தம் என்ற சொல் பல இடங்களில், 'பேரறிவு'[19] 'தூய அறிவு',[20] 'தெளிந்த அறிவு',[21] என்ற பொருள்களில் வழங்கப்படுகிறது. எல்லாம் அறிந்த சித்தனாகச் சிவனைத் திருமூலர் குறிக்கின்றார்.[22] 'அறிவன்' என்ற பழந்தமிழ்ச் சொல்லுக்கு ஈடாக, 'சித்தன்' என்ற சொல் திருமந்திரத்தில் வழங்கப்படுகிறது.

## பக்தி இலக்கியத்தில் சித்தர்

தேவார ஆசிரியர்கள், தம் வழிபடுகடவுளாகிய சிவனைக் குறிக்கவும், சிவனடியார்களுள் ஒருவகையினரைக் குறிக்கவும், 'சித்தர்' என்ற சொல்லைப் பல இடங்களில் பயன்படுத்துகின்றனர்.

"அன்னியூர் சித்தர் தாள்தொழ முத்தர் ஆவரே"[23]

"மதயானை உரித்தஎம் சித்தனை"[24]

என்ற தேவாரத்தொடர்களும்,

"பரகதி கொடுத்து அருள் செய்யும் சித்தனே"[25] என்ற திருவாசகத் தொடரும், பரம்பொருளையே 'சித்தன்' என்று சுட்டுகிறது. 'பரம்பொருள்', 'சிவன்', 'சித்தன்' என்ற சொற்கள், ஒரே பொருளைக் குறிக்குமாறு திருமுறைகளில் பயின்று வருகின்றன.

'இறைவன் வெவ்வேறு வடிவில் வந்து நிலவுலக மக்கள் வழிபடக் காட்சி தந்தான்' என்று புராணக் கதைகள் கூறுகின்றன. இவற்றுள், 'சித்தர் வடிவில் வந்து சித்தர்கள் வழிபடக் காட்சி தந்தான்' என்று தேவாரக் குறிப்புரையொன்று கூறுகிறது.

திருநறையூரில் உள்ள சிவாலயத்திற்கு, ‘சித்தீச்சுரம்’ என்று பெயர். இங்கு, சித்தர்கள் பூசிக்க இறைவரும் சித்தராய் எழுந்தருளினார் என்று குறிக்கப்படுகிறது.[26]

மேலும், இறைவன் அறிவு வடிவானவன் என்பதைக் குறிக்கும் வகையில், ‘சித்த வடிவினன் போலும்’[27] என்னும் தேவாரத்தொடர் அமைகிறது.

முத்தி நிலையுற்று, நிலவுலகை நீங்கி, வானுலகில் நுண்ணுடலோடு வாழும் தேவகணத்தாரோடு வாழும் ஓர் இனத்தவராகச் சித்தர்கள் கருதப்படுகின்றனர் என்ற குறிப்பு திருஞானசம்பந்தர் பாடிய திருநள்ளாறு, திருமுதுகுன்றம், திருக்கக்குடி, திருப்பழுவூர், திருநின்றியூர், திருக்கானூர், திருப்பாவை, திருமணஞ்சேரி ஆகிய தேவாரப் பதிகங்களில் காணப்படுகிறது.

திருஞானசம்பந்தர், ‘சித்தர்’ என்ற சொல்லைப் பல இடங்களில் கையாளுகின்றார். ஆன்மிக நெறியினருள் ஓர் இனத்தவராகச் சித்தர்களைக் குறிக்கும் அவர், சித்தர்கள் இயல்பு பற்றியோ, அவர்களது ஆன்மிகநெறி பற்றியோ ஏதும் விளக்கவில்லை.

திருநாவுக்கரசர் தம்தேவாரத்தில் பல இடங்களில், குறிப்பாக, சித்தர்களின் மனநிலையை உணர்த்துகிறார். அவர், சிவனடியார்களை வகைப்படுத்தும் பட்டியல் ஒன்றின் இறுதியில்,

“சித்தத் துருகிச் சிவன்எம் பிரானென்று சிந்தையுள்ளே
பித்துப் பெருகப் பிதற்றுகின்றவர்”[28]

என்னும் வரிகள் சித்தர்களின் அகநிலையைக் குறிப்பது போன்று அமைகிறது. ‘வெளிப்புலன் நோக்கியும், ஐம்பொறிகளையும் தடுத்து உள்முகமாக நெறிப்படுத்துகின்றவரின் சித்தம் ஒடுங்கும். அவ்வாறு ஒடுங்கிய சித்தத்துள் அவர்கள் இறைவனைக் காண்பர்’ என்கிறார் திருநாவுக்கரசர்.

“சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்”[29] என்று சுந்தரர் பாடுகிறார்.

மாணிக்கவாசகரோ, இந்திரியங்களை ஆளுகையில் அலைந்து திரிந்து நரகில் வீழ்ந்திடாமல் சிந்தையைத் தெளிவித்து, அதனையே சிவப்பரம்பொருளாக்கிடும் நிலையைக் குறிப்பிடுகிறார்.

பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற்புராணத்தில், ‘எல்லாம் வல்ல சித்தரான படலம்’, ‘அட்டமா சித்தி உபதேசித்த படலம்’, ‘கல்லானைக்குக் கரும்பருத்திய படலம்’ ஆகிய பகுதிகளில் பலவகைச் சித்துக்கள் குறிக்கப்படுகின்றன. சிவபிரான் எல்லாம் வல்ல சித்தராகச் சுட்டப்படுகிறார்.

இறைவனின் அற்புதச் செயல்களைக் கூறிப் புகழ்பாடுவதும், மக்களை இறைவழிபாட்டில் ஈடுபடுத்துவதும், புறச்சமயங்களை மக்கள் நாடாமல் தடுப்பதும், பக்தி இலக்கியங்களின் முதன்மையான குறிக்கோள்களாக இருந்தன. எனவே, இவ்விலக்கியங்களில், சித்தர்கள் பற்றிச் சிறுசிறு குறிப்புகள், சிற்சில இடங்களில் காணப்படுகின்றனவே தவிர, சித்தர்களின் வாழ்க்கைநிலை, இயல்பு, நெறிமுறைகள் பற்றிய விளக்கங்களும் விரிவுகளும் காணக்கிடைக்கவில்லை. எனினும் பின்னர் ‘சித்தர்பாடல்கள்’ என்ற கருத்துருவாக்கம் அமைய இவையனைத்தும் கால்கோள் இடுகின்றன என்பது உண்மையாகும்.

## சித்தர் பாடல்களில் சித்தர்

சித்தர் பாடல்களின் தொகுப்பாக வெளிவந்துள்ள, ‘பதினெண் சித்தர்கள் பெரிய ஞானக் கோவை’ நூலிலும், சித்தர் மருத்துவ நூல்களிலும், பிற, பிற்கால இலக்கியங்களிலும், ‘சித்தம்’, ‘சித்து’, ‘சித்தர்’ என்ற சொற்கள் மிகுதியாக வழங்கலாயின. தாயுமானவர் பாடல்களுள், ‘தேசோமயானந்தம்’

என்னும் பகுதியில், சிந்தையின் இயல்பும், ‘சித்தர் கணம்’ எனும் பகுதியில், சித்தர்களின் செயலாற்றலும் தெளிவாகவும், விரிவாகவும் பேசப்படுகின்றன. சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த இராமலிங்க சுவாமிகளின் திருவருட்பாவின் உபதேசப்பகுதி, சித்துகளைப் பற்றியும், அவற்றைப் பெறும் வழி வகை பற்றியும் விரிவாகப் பேசுகிறது. இராமலிங்கர், சித்தர்களை, ‘அழியாச் சித்தர்’[30] என்றே குறிக்கிறார். இத்தொடர்மூலம் சித்தர்கள், ‘மரணமிலாப் பெருவாழ்வு பெற்று, என்றும் உள்ளவர்களாகத் தங்களை ஆக்கிக்கொள்பவர்கள்’ என்று இராமலிங்கர் உணர்த்துகிறார். சித்தத்தைச் சிவன்பால் வைத்த சித்தர்களின் புறத்தோற்றம் பற்றி, சித்தர் இலக்கியம் விரிவாகப் பேசுகிறது.

## சித்தர்களின் புறத்தோற்றம்

சித்தர்கள் நடை, உடை, செயற்பாடுகளால் பிற மக்களிடமிருந்து வேறுபடுகின்றனர். சித்தர்கள் பலரும் தங்கள் தலையில் சடைமுடியும், முகத்தில் நீண்ட தாடியும், கழுவாத உடலும், கந்தல் உடையும் தாங்கியவர்களாகக் காணப்படுகின்றனர். அவ்வாறே காட்டவும் படுகின்றனர். “உடுத்தற்கொரு கோவணம், உண்பதற்குக் காய்கனிகள், உறங்கப் புறந்திண்ணை, வேர்த்தால் குளிப்பதற்கு வெள்ளிய ஆற்றுநீர்”[31] எனச் சித்தர்கள் எளிய, புற வாழ்வை மேற்கொண்டனர். சித்தர்களின் வாழ்க்கைமுறை உலகியல் நடப்புக்கு மாறாக இருக்கும் என்பதை இவ்விளக்கம் உணர்த்துகிறது. மேலும், சித்தர்கள், “இடம், பொழுது, பாராமல் பேய்போல் எங்கும் திரிவர்; எதையும் பொருட்படுத்தாமல் பிணம்போல் கிடப்பர்; நாய்போல் அருந்துவர்; நரிபோல் உழல்வர்; பெண்களைத் தாய்போல் எண்ணுவர்; பிறமக்கள் அனைவரையும் உறவினராக எண்ணிப் பரிவு காட்டுவர்.[32] இவ்வாறு சித்தர்களின் புறத்தோற்றத்தையும் செயற்பாடுகளையும் பட்டினத்தார் விளக்குகிறார்.

மரபாகக் காட்டப்படும் சித்தர்களின் புறத்தோற்றத்திற்கு மாறானதொரு தோற்றம், இராமலிங்கசுவாமிகளிடம் காணப்படுகிறது. தூய உடலும்,

அவ்வுடலை மூடிய வெள்ளாடையும் உடைய அவர், எல்லாருடனும் இயல்புறப் பழகி, மக்களோடு கலந்துவாழும் இயல்புடையவராக இருந்திருக்கிறார் என்பது வரலாற்றுண்மை.

ஆகவே, புறத்தோற்றம் என்பது கால, இட, சூழ்நிலைக்கேற்ப மாறும் தன்மையது. எல்லாக் காலத்தும் இடத்தும் எல்லாச் சித்தர்களிடமும் ஒரே மாதிரியான புறத்தோற்றத்தை எதிர்பார்க்க இயலாது. எனவே, சித்தர்களை அடையாளம் காண, அவர்களது புறத்தோற்றம் பொதுவானதொரு அளவுகோலாக அமையாது எனலாம்.

இத்தகு சித்தர்களை, 'பதினெண்சித்தர்கள்' என்று குறிப்பிடும் வழக்கம் தமிழகத்தில் உண்டு.

## பதினெண்சித்தர்கள்

'பதினெண் சித்தர்கள்' என்ற கூற்று, பதினெட்டுச் சித்தர்களைக் கொண்ட தொகுப்பினைக் குறிக்கிறது. ஆனால், இந்தப் பதினெட்டுப்பேர் யாவர் என்று காட்டுவதில், தொகுப்பிற்குத் தொகுப்பு வேறுபாடு காணப்படுகிறது. எனினும், பதினெட்டு என்ற எண்ணில் வேறுபாடு இல்லை.

மேலும், தமிழ் இலக்கியத் தொகுப்புகளில், இந்தப் பதினெட்டு என்னும் எண்ணிக்கை, தொடர்ந்து இடம்பெற்று வருகிறது. சான்றாக, சங்கஇலக்கியத் தொகுப்புகள், 'பதினெண்மேல்கணக்கு நூல்கள், பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்' என்று பதினெட்டு என்னும் எண்ணிக்கையிலேயே பெயர் பெறுவதைக் கொள்ளலாம்.

அவ்வரிசையில், பதினெண்கலைகள், பதினெண்புராணங்கள், பதினெண்மொழி, பதினெண்அரசர் என்றும் வகைப்படுத்தக் காணலாம். பாரதப்போர் பதினெட்டு நாள்கள் நடந்ததாக இதிகாசக் குறிப்புத் தெரிவிக்கிறது. எனவே, பதினெட்டு என்னும் எண் முறையில் தொகுத்துச்

சொல்லும் வழக்கு, தமிழகத்தில் இருந்து வந்தது உறுதியாகிறது. அந்த அடிப்படையிலேயே, 'பதினெண்சித்தர்' என்னும் வழக்கும் தமிழகத்தில் உருவாகி நிலைத்திருக்கக்கூடும்.

ஆனால், பதினெண்சித்தர் என்ற தொகையைக் கொண்டு, தமிழகத்துச் சித்தர்கள், மொத்தம் பதினெட்டுப்பேர் மட்டுமே என்ற முடிவுக்கு வரமுடியாது. காரணம், இந்தப் பதினெண்சித்தர் பட்டியலை, ஒவ்வொருவரும் ஒவ்வொருவகையில் முன்வைக்கின்றனர். அவ்வாறு வைக்கப்படும் பெயர்ப்பட்டியலில் பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. அவற்றுள் சான்றுக்கு மூன்றினைக் காணலாம்.

பதினெண்சித்தர்களின் பெயர்களை வரிசைப்படுத்தி,

நந்திஅகத்தியர் மூலர்புண் ணாக்கீசர்
நற்றவத்துப் புலத்தியர், பூனைக்கண்ணர்
கந்திடைக் காடர்போகர் புலிக்கையீசர்
கருவூரர் கொங்கணர் காலாங்கி
சிந்திஅழுகண்ணர் அகப்பேயர் பாம்பாட்டி
தேரையர் குதம்பையர் சட்டைநாதர்
செந்தமிழ்சேர் பதினெண்மர்[33]

என்கிறது ஒரு பழம்பாடல். இதுபோல்,

"தானென்ற திருமூலர், புண்ணாக்கீசர்
சட்டைமுனி, மச்சமுனி, புசுண்டரோடு
கோனென்ற கலைக்கோட்டு முனிவசிஷ்டர்
கும்பமுனி கமலமுனி இடைக்காட்டாரும்
வானென்ற கொங்கணரும் விசுவாமித்திரர்
வளர்அட்ட கோணமுனி சனகரொடு

தேனென்ற சனத்குமாரர் முதலாயுள்ள
சிறந்தகோ ரக்கர்கருவூ ரர்தானே[34]

என்கிறது மற்றொரு பாடல்.

அபிதானசிந்தாமணியோ, அகத்தியர், நந்தி, கமலமுனி, போகர், கூன்கண்ணர், இடைக்காடர், கோரக்கர், கொங்கணர், புண்ணாக்கீசர், கைலாசநாதர், மச்சமுனி, சுந்தரானந்தர், சட்டைமுனி, வாசமுனி, ரோமரிஷி, திருமூலர், கூர்மமுனி, பிரமமுனி ஆகியோரைப் பதினெண்மராகச் சுட்டுகிறது.

ஆக, பதினெண்சித்தர்கள் என்று பொதுவாய்ச் சொல்லப்பட்டாலும், அவர்களைப் பற்றிய பட்டியல் ஒரேவகையில் அமையவில்லை. அவரவரது நிலைப்பாட்டில் பதினெட்டுப்பேரை மட்டும் தருகிற அளவிலேயே அவை ஒன்றுபடுவதைக் காணமுடிகிறது. அவற்றை ஒருங்கே தொகுத்து வைத்துப் பார்த்தால், சித்தர்களின் எண்ணிக்கை பதினெட்டைத் தாண்டுவது உறுதி. எனவே, ‘பதினெண் சித்தர்’ என்ற தொடர், காலங்காலமாகச் சொல்லப்பெற்று வந்த ஒரு மரபுத்தொடரே தவிர, அறுதியிட்டுக்கூறும் எண்ணிக்கைத்தொடர் அன்று. இத்தொடர், யாரால், எக்காலத்தில் ஏற்படுத்தப்பட்டது என்று உறுதியாகக் கூற வழியில்லை.

ஆக, பதினெட்டைத் தாண்டும் சித்தர்களின் எண்ணிக்கை இவ்வளவுதான் என்று அறுதியிட முடியாதவண்ணம் பெருகியுள்ள சித்தர்களை, ‘சித்தர்கணம்’ என்று குறிக்கும் வழக்கம் தமிழில் இருந்திருக்கிறது. தாயுமானவர், சித்தர்களின் பெயர்களைக் குறிக்காமல், ‘சித்தர்கணம்’ என்ற தொடரையே கையாளுகிறார். ‘சித்தர்கள், வேதாந்தம், சித்தாந்தம், சமரசம் என்னும் வேறுபாடுகளைக் கடந்த மெய்ஞ்ஞானிகள்’ என்று கூறுகிறார்.[35]

வேங்கடபாரதி இயற்றிய, ‘பாரதிதீபம்’ என்ற நிகண்டிலும், ‘சித்தர் கணம்’ என்ற குறிப்பே உள்ளது. ஆனால், சித்தர்கள் எவரெவர் என்று

குறிக்கப்படவில்லை.[36] பதினெண்வகைத் தொகைகளை எடுத்துக் காட்டும் பிங்கலநிகண்டும், சித்தர்கணத்தொகையைக் குறிக்கிறதே தவிர, சித்தர்களின் பெயர்களைக் குறிக்கவில்லை.

இவை ஒருபுறமிருக்க, மேற்சுட்டிய பட்டியல்களில் ஒன்றில்கூட, சித்தர் சிவவாக்கியர் பெயர் இல்லை என்பது இங்குக் குறிக்கத்தக்க ஒன்றாகும். ஆனால்,

“கும்பமுனி தேரையர் சிவவாக்கியர்
நந்திமுனி யூகிமுனி சண்டிகேசர்
கோரக்கர் மச்சமுனி ரோமரிஷி
புலிப்பாணி புண்ணாக்கீசர் சட்டநாதர்
புசுண்டரிஷி இடைக்காடர் காலாங்கி
திருமூலர் பூனைக்கண் ணர்போகர்”[37]

என்னும் இப்பாடலில் சிவவாக்கியர், பதினெண்சித்தர்களின் வரிசையில் மூன்றாவதாக வைத்து எண்ணப்படுகிறார். அதுபோல, ‘பதினெண்சித்தர்கள் பெரிய ஞானக்கோவை’ என்ற சித்தர்பாடல்களின் தொகுப்புநூல், சிவவாக்கியரின் பாடல்களையே முதலாவதாக வைத்துத் தொகுக்கப்பட்டுள்ளது. எனவே, சித்தர் வரிசையில் சிறப்பிடம் பெறுபவர்களுள் ஒருவராகச் சிவவாக்கியர் திகழ்கிறார் என்கிற கருத்தும் பெறப்படுகிறது.

### சித்தர்களின் பெயர்கள்

பழங்காலந்தொட்டு இன்றுவரை, தமிழகத்தில் வாழ்ந்த மன்னர்கள், வள்ளல்கள், புலவர்கள், பாணர்கள், கூத்தர்கள் முதலியோருள் பலருடைய இயற்பெயர்களை அறிந்துகொள்ள முடியவில்லை. அதுபோல், அவர்களது வரலாறுகளையும் முழுமையாக அறிந்துகொள்ள இயலவில்லை. இயற்பெயர் தெரியாத சங்கப்புலவர்கள், அவர்கள் இயற்றிய பாடல்களில்

இடம்பெற்றுள்ள அரிய சொற்றொடர், உவமை முதலியவற்றைக் கொண்டு, பெயர்கள் பெற்றமைகின்றனர். அணிலாடு முன்றிலார், செம்புலப்பெயனீரார், குப்பைக்கோழியார், கல்பொருசிறுநுரையார் போன்றவை உவமையாற் பெற்ற பெயர்களாக அமைகின்றன. எனவே, இயற்பெயர் தெரிந்திடாத புலவர்கட்கு ஏதேனும் ஓர் அடிப்படையில் காரணப்பெயர் சூட்டும் முறை, தமிழ் இலக்கிய மரபில் அமைந்திருக்கிறது.

அந்த வகையில் சித்தர்களது பெயர்களும் காரணப் பெயர்களாகவே பெரிதும் அமைந்திருக்கக் காணலாம். சிவவாக்கியர் பெயரும் அவ்வாறே இயற்பெயராக அல்லாமல், காரணப் பெயராக அமைந்திருத்தல் வேண்டும்.

**சிவவாக்கியர்-பெயர்க்காரணம்**

சிவவாக்கியரின் இயற்பெயர் இன்னதென்று அறிய இயலவில்லை. இவருக்கு, சிவவாக்கியர் என்ற பெயர் அமைவதற்குரிய காரணத்தைக் கீழ்வருமாறு,

“சிவசிவா என்ற ஒலியுடன் நிலத்தில் பிறந்தவர்”[38]

“சிவசிவா என்று சொல்லிக்கொண்டு இவர் பிறந்த காரணத்தால் இவருக்குச் சிவவாக்கியர் என்று பெயரிடப்பட்டுள்ளது”[39]

என்பதன்வழி அறியலாம்.

ஆகவே, இவர் பிறந்தவுடனேயே பேசிய முதற்சொல், ‘சிவ’ என்று அமைந்ததால், இவரைச் சிவவாக்கியர் என்று கூறினர் எனத்தெரிகிறது.

சிவவாக்கியர், தம் பாடல்களில் பல இடங்களில், ‘சிவாயம்’ என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். ‘சிவ’ என்னும் மந்திரவாக்கைக் கூறியதால், இவர் சிவவாக்கியர் எனப்பெயர் பெற்றார் என்பர். சிவவாக்கியர் தம்பாடல்களில் மிகுந்த அளவு பயன்படுத்திய சொல், ‘சிவாயம்’ என்பதாம்’[40] என்பார் இரா.

மாணிக்கவாசகம். "சிவனே இவருக்கு வாக்கு அருளியதால் சிவவாக்கியர் என்று பெயர் பெற்றார்" என்றும் குறிப்பிடுகிறார்.

மேலும், இவரது பாடல்களின் தொடக்கக் காப்புச்செய்யுளானது,

"அரியதோர் நமச்சிவாய மாதியந்த மாவதும்
ஆறிரண்டு நூறுதேவ ரன்றுரைத்த மந்திரம்
கரியதோ ரெழுத்தை யுன்னிச் சொல்லுவேன் சிவவாக்கியம்
தோடதோட பாவமாயை தூரதூர வோடவே"[41]

என்று அமைகிறது. அதில் இடம்பெறும் 'சிவவாக்கியம்' என்ற சொல், அவரது நூலுக்குப் பெயராகவும், அந்நூலை இயற்றிய ஆசிரியர் பெயர் அந்நூலின் அடிப்படையில், சிவவாக்கியர் என்று விளங்கியதாகவும் கொள்ளமுடிகிறது.

"தம் பாடல்களில் சுமார் 50 இடங்களில் சிவாயம் என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். 'சிவ' என்ற மந்திர வாக்கினைக் கூறியதால், அவர் சிவவாக்கியர் எனப் பெயர் பெற்றார்"[42]

பாடல்களில் இடம்பெறும் தொடரின் அடிப்படையில் பெயரிடும் மரபு, சங்க இலக்கியத் தொகுப்பில் இருந்தே பயன்பாட்டில் இருந்திருக்கிறது. 'விட்டகுதிரையார்', 'செம்புலப்பெயனீரார்' என்பனவற்றை இதற்குச் சான்றுகளாகக் கொள்ளலாம். அந்த அடிப்படையில், 'குதம்பாய்' என்ற சொற்பயன்பாட்டின் அடிப்படையில், 'குதம்பைச் சித்தர்' பெயர் பெறுவதுபோல், சிவவாக்கியர் பெயரும் அமைந்திருக்கலாம்.

அத்துடன், சித்தர்கள் அகத்துள் நிறைஞானிகளாக விளங்கும் அதேநேரத்தில், புறத்தில் தம்மை வெளிக்காட்டிக் கொள்ள விரும்பாதவர்கள். 'தன்னையறிந்து ஒழுகுவோர் தன்னை மறைப்பர்'[43] என்பதால், தம் இயற்பெயரைக் காட்டிக் கொள்ள விரும்பாத இச்சித்தருக்கு, சிவவாக்கியர் என்பது காரணப்பெயராக அமைந்திருத்தல் ஏற்புடையதாகிறது.

எனினும், சிவவாக்கியர் என்னும் பெயர் இவருக்குப் பெற்றோரால் இடப்பெற்றது என்று அபிதானசிந்தாமணியும், புலவர் சரித்திர தீபகமும், கா.சு.பிள்ளையின் இலக்கிய வரலாறும் குறிப்பிடுகின்றன.

"சிவ என்னும் சத்தத்துடன் தோன்றி, ஞானநிஷ்டாபரராய் இருந்து, சிவவாக்கியமெனத் தம்பெயரால் நூல் செய்தார்"[44] என்றும் கூறப்படுகிறது.

மேற்சுட்டிய கருத்துக்களின் அடிப்படையில், இயற்பெயராகவும் காரணப்பெயராகவும் சுட்டப்படுகிற 'சிவவாக்கியர்' என்ற பெயருக்கு முன்னதாக, வேறு பெயர் ஏதும் இல்லை என்பது தெளிவாகிறது.

## சிவவாக்கியர் வாழ்க்கை வரலாறு

சிவவாக்கியர், "தை மாதம் மக நட்சத்திரம் இரண்டாம் பாதத்தில் பிறந்தார். திருமூலர் மரபில் கன்னியின் பிள்ளையாகப் பிறந்தார்"[45]

இவரது குலம் சங்கர குலம். தலைமுறைகள் இருபது.[46] இவர் ஐம்பத்தோர் அகவைவரை தவவாழ்வு மேற்கொண்டார். பின், தம் பெற்றோரிடம் தமக்குத் திருமணம் செய்விக்க வேண்டினார். பெற்றோர் செய்வித்தனர். இவருக்கு, 'சிவானந்தர்' என்ற மகன் பிறந்தார். பிறகு சிவவாக்கியர், எண்பத்தோர் அகவைவரை வாழ்ந்தார். நிறைவுக்காலத்தில், ரிடிகள், முனிவர்கள், சித்தர்கள்சூழ, சீனப்பதி பக்கத்தில் தில்லை வனத்தில் இருந்தார். குருந்த மரத்தடியில் இருந்து தம்சீடர்களுக்கு உபதேசம் அருளிய இச்சித்தர் பலமுறை சமாதியில் இருந்து எழுந்தார் என்கிறது, மஹாமகத்துவம் பொருந்திய போகமுனிவர் சத்த காண்டம் எனும் நூல்.[47]

முருகதாசர் இயற்றிய, புலவர் புராணத்தில் இடம்பெறும் சிவவாக்கியர் வரலாறு பின்வருமாறு: "காசியாத்திரை சென்ற கடைக்குல ஞானி ஒருவரை, பிராமணர் ஒருவர் சந்தித்தார். அவரிடம் அந்த ஞானி, "இருநாழி மணலும் படுசுரைக்காயும் கொடுத்து, இவற்றைச் சுவையான உணவாக

அட்டுத்தருவாளை மணந்து இன்பம் நுகர்க” என்று சொல்லிச் சென்றார். அதைப்பெற்றுக்கொண்ட பிராமணர், ‘குலத்தில் உயர்வு தாழ்வு இல்லை. இறை ஒன்றே’ என்னும் உண்மையை அப்போது உணர்ந்தார். அவரை பிற்காலத்தில் அறிந்த சைவர்கள், ‘சிவவாக்கியர்’ எனவும், வைணவர்கள், ’திருமழிசை ஆழ்வார்’ எனவும் அழைத்தனர். அத்தகைய பிராமணர், ஞானாசிரியர் அளித்த பொருட்களுடன் ஏந்திச் சென்று, கன்னியர் பலரை, நாடி வேண்டினார். யாரும் முன்வந்திலர். பின்னர், குறவர் குலத்தைச் சேர்ந்த ஒரு நங்கையிடம் கொடுத்து வேண்டினார். ‘அதுவும் ஒரு நாட்டில் விளையும் அரிசி’ என எண்ணி வாங்கிய அப்பெண், விரைந்து சமைத்துத் தந்தாள். அதனை ஏற்று, உண்டு மகிழ்ந்த அப்பிராமணர் அப்பெண்ணின் பெற்றோரைக் கண்டு, அவர்கள் இசைவுடன் மணந்து கொண்டார். அவர்களுக்குரிய குலத்தொழிலையே அவரும் செய்து வாழ்ந்துவந்தார்.

கூடை செய்வதற்காக, ஒருமுறை கானகத்தில் ஒரு பெரிய மூங்கிலை வெட்டியபோது, அதிலிருந்து பொன் துகள்கள் உதிரத்தொடங்கின. அதைக்கண்டு மயங்காமல், சிவவாக்கியர் அவ்விடத்தைவிட்டு விரைவில் நீங்கினார். வழியில் வந்த நால்வர், அன்னாரது விரைவுக்கான காரணத்தை வினவினர். சிவவாக்கியரோ, மூங்கிலில் ‘ஆட்கொல்லி’ இருப்பதாகக் கூறினார். அவர்களும் அதனைக் காண விரைந்து அவர் சுட்டிய திசைநோக்கிச் சென்றனர். அங்கே மூங்கிலில் இருந்து  பொன் உதிர்ந்திருக்கக் கண்டு மகிழ்ந்தனர். இதனைக் கண்டு விலகிய சித்தரை, பித்தர் என்று இகழ்ந்தனர். அனைத்துப் பொன்னையும் மூட்டை கட்டிக் கொண்டனர். இரவில் யாரும் அறியாமல் ஊருக்குள் கொணரத் திட்டமிட்டனர். இருவர் கானகத்தில் இருந்து காவல் புரிய, ஏனைய இருவர், ஊருக்குள் சென்று உணவு எடுத்து வருவதாகவும் திட்டமிட்டுச் செயல்பட்டனர். இருகுழுக்களாகப் பிரிந்த அவர்கள், முழுப் பொன்னையும் தமதாக்கிக் கொள்ளப் புதிய திட்டம் தீட்டிக்கொண்டனர். காவல் புரிந்த இருவர், உணவு கொண்டு வந்த இருவரை,

குடிநீர் எடுத்து வரச் சொல்லி அனுப்பினர். அவ்வாறே சென்ற அவர்களை, அவர்கள் அறியாமல் பின்தொடர்ந்து சென்றனர். குடிநீர்க் கிணற்றுக்குள் இறங்கிய அவர்களை, எஞ்சிய இருவர், பெருங்கல் ஒன்றினைப் போட்டுக் கொன்றனர். பின்னர், திட்டமிட்டபடி அனைத்துப் பொன்னையும் தமதாக்கும் மகிழ்ச்சியில், உணவுப் பொட்டலங்களை விரித்து உண்டனர்; உடனே மயங்கி விழுந்து இறந்தனர். காரணம், இவர்களைப்போல அவர்களும், இவர்களைக் கொன்று, பொன் அனைத்தையும் எடுத்துச் செல்லவிரும்பி, உணவில் நஞ்சு கலந்திருந்தனர். ஆக, அனைவரும் இறக்க, பொன்மூட்டை மட்டும் அப்படியே கிடந்தது. 'ஆட்கொல்லி' என்று சித்தர் கூறியது மெய்யானது.

பின்னொருநாள், இவர் கீரை பறித்துக்கொண்டிருக்கும்போது தன்னிலை கூடி, சிலைபோல் நின்றார்; கொங்கணரால் உணர்வு பெற்றார். கொங்கணச்சித்தர் இவரது மனைவியிடம் வந்து, கழித்துப்போட்ட பழைய இரும்புகளைக் கொண்டுவரச்செய்து, தங்கமாக மாற்றிக் கொடுத்துவிட்டுப் போனார். அதை, அக்குறமகள், தம்கணவரிடம் காட்ட, அவரோ, அதனைக் கொண்டுபோய்ப் பாழும் கிணற்றில் போடச்செய்தார். இவ்வாறு, பொருட்பற்று சிறிதும் இல்லாதநிலையில் வாழ்ந்த சிவவாக்கியர், தம்மனைவியுடன் ஏழுபருவம் மட்டும் இன்பந்துய்த்து, அதன்பின் தனித்துச் சஞ்சரிக்கத் தொடங்கினார். இவர், சிவனை ஒருக்கால் பாடுவார்; நெடுமாலை ஒருக்கால் பாடுவார். நீரும் தீயும் அவன் திருவடிவம் என்னும் ஞானமொடு தொண்டு செய்தார்."[48]

சிவவாக்கியரை, திருமழிசையார் என்னும் பெயரில் வைணவராகக் கருதுவோர் கூறும் வரலாற்று நிகழ்வு பின்வருமாறு:

"கச்சியில், கணிகண்ணன் என்னும் பெயருடைய, மன்னன் ஒருவன் ஆண்டு வந்தான். அவனைக் காண, சிவவாக்கியர் என்னும் மாமழிசை ஆழ்வார் அரண்மனைக்கு வந்தார். அந்த நேரத்தில், அம்மன்னன் ஒரு

நாட்டிய நங்கையின் கலையழகில் மூழ்கி, இவரைக் கவனியாமல், 'போ' என்று சொன்னான்.

இதுகண்டு வெகுண்ட அச்சித்தர், அவ்வூர்க் கோவிலில் பள்ளிகொண்டருளிய கோவிந்தனைக் கண்டு, 'மனைவியுடன் மாசுணப்பாயையும் சுருட்டிவா' என்றார். திருமாலும் அவ்வாறே செய்ய, பிழை உணர்ந்த மன்னன், சித்தரைப் பணிந்து மன்னித்தருள வேண்டினான். அமைதிகொண்ட இச்சித்தர், அவனைப் பொறுத்தருளி, அவனுக்கு உபதேசம் செய்து அருளினார். சிலநாட்கள் அவனது அரண்மனையில் தங்கியிருந்து, பின்னர் பலபதிகள் சென்று சித்துவிளையாடினார்."

சிவவாக்கியர்தம் பாடல்களுக்கு உரைநல்கிய மா.வடிவேலு முதலியார் என்பவர் தந்துள்ள சிவவாக்கியர் வாழ்க்கைக் குறிப்பு பின்வருமாறு அமைகிறது.

"திருமழிசையிலே, பிருகு மகரிஷி, பார்வதி பரமேசுவரனை நினைந்து தவம் செய்துகொண்டிருந்தார். இவரது தவத்தைக் கெடுப்பதற்காக, தேவேந்திரன் ஓர் அழகிய தேவகன்னியை, அவர்முன் அனுப்பி வைத்தான். அவள், பலவிதத்திலும் முயன்று, அவர் தவத்தைக் கலைத்தாள். அவரைத் தன்வயப்படுத்தி, அவருடன் கலந்து, ஓர் ஆண்மகவைப் பெற்றாள். அம்மகவை, அப்பகுதியிலேயே விடுத்து, பின்னர் தேவருலகம் திரும்பினாள். பிருகு மகரிஷியும் அக்குழந்தையை விடுத்து, தவத்தில் மூழ்கினார். இவ்வாறு பெற்றோரால் தனித்துவிடப்பட்ட அக்குழந்தை, பசித்து அழுதது. அப்போது, இறைவன் உமையொடு தோன்றி அருள்பாலித்தார்.

அதுபோது, 'திருவாளன்' என்னும் வேடன் அவ்வழியே வந்து கொண்டிருந்தான். மகப்பேறு வாய்க்காத அவ்வேடன், அக்குழந்தையைக் கண்டான்; மகிழ்வு கொண்டான். அக்குழந்தையை எடுத்துச் சென்று தம்

மனைவியிடம் தந்தான். தாய்மை அன்புமீதூர, அக்குழந்தையைத் தம் மார்போடு அழுத்திய வேடனின் மனைவிமாட்டுத் தாய்ப்பால் சுரந்தது. இறையருள் என்று எண்ணி, அக்குழந்தைக்குப் பாலருத்தினாள். ஆனால், இறைவனின் பேரானந்தப் பாலைப் பருகிய அக்குழந்தை, வேடன் மனைவி ஊட்டிய பாலை அருந்தாமலேயே வளர்ந்தது. பின்னர், அவ்வேடன் சோதிடர்களை அழைத்தான். அவர்களைக் கொண்டு திருமழிசையில் கண்டெடுத்த குழந்தை என்பதால் அக்குழந்தைக்கு, ‘திருமழிசையான்’ எனப்பெயர் சூட்டினான். அவ்வேடன்வழி வைணவத் தொடர்புடையாளனாக இருந்த திருமழிசையான், வைணவனாக வளர்ந்தான்; திருமாலைப் பணிந்தான். பின்னர், சைவசமயத்தில் புகுந்து சிவவாக்கியர் எனும் பெயர் பெற்றார். சிவதத்துவங்களைப் பலபடப் பாடி, சிவப்பேறு எய்தினார்.”[49]

‘சித்தர் பாடலும் அவர்தம் தத்துவமும் ஒரு கண்ணோட்டம்’ என்னும் தலைப்பில் கு.அருணாசலக் கவுண்டர் கூறுவதாவது:

“சிவவாக்கியர் என்னும் பெயருடைய இச்சித்தர், பலசமயங்களில் புகுந்தும், உணர்ந்தும், ஆய்ந்தும் பெற்ற அனுபவத்தில், சைவமே நிலையெனச் சார்ந்தார்; பல பாடல்களை இயற்றினார். சிவனருளாலே பலநாடுகளுக்குச் சென்று, பிறமதங்களை வென்று, திருமயிலை வழியாக வந்தார். அப்போது, அவரைப் பேயாழ்வார் கண்டார். இவரை வைணவராக்க மனங்கொண்டார். நந்தவனங்களில் பூச்செடிகளைப் பிடுங்கித் தலைகீழாக நட்டார். ஓட்டை உடைசலான குடத்திலே, நீர் எடுத்து, அச்செடிகளுக்கு வார்த்தார். இதனைக் கண்ணுற்ற சிவவாக்கியர், தம்மொடுவந்த சீடர்களுக்கு, அந்த வைணவரின் பேய்த்தனமான செயலைச் சுட்டிக்காட்டிச் சிரித்தார். பேயாழ்வாரோ, புன்முறுவல் பூத்தபடி, சிவவாக்கியரைப் பார்த்து, ‘சமயங்கள்தோறும் நுழைந்து, எதிலும் நிலைகொள்ளாமல், விருதுகட்டிக் குதர்க்கம் செய்வதிலேயே பொழுதுபோக்கி வருகிறாய். இப்படி, வாணாளை வீணாளாய்க் கழிக்கும் உமது

பேய்த்தனத்தை உணர்த்தவே இப்படிச் செய்தேன்' என்றார். சிவவாக்கியரும் இது கேட்டுச் சிந்தித்தார். இதுவரை செய்து வந்த வாத, பிரதிவாதங்களை எண்ணிப்பார்த்தார். 'அட்டமாசித்திகள் கைவரப்பெற்றுப் பிறரை மயக்கி, தம்மையும் மயக்கி, திரிவதைக் காட்டிலும் சிறந்த குறிக்கோள் வேறு ஏதும் இல்லையா?' என்று தமக்குள் சிந்தித்தார். பேயாழ்வாரிடம் கலந்து, உரையாடி, தெளிவுபெற்றார். 'பக்திசாரர்' எனும் பெயர் பெற்று, வைணவரானார். வைணவவுலகம் இவரை, 'திருமழிசையாழ்வார்' என்று அழைத்தது."[50]

அருணாச்சலக் கவுண்டர், சிவவாக்கியராக இருந்து பேயாழ்வார் மூலமாக திருமழிசையாழ்வார் ஆனார் என்று கூறும், இக்கதைக்குச் சான்றெனக் கொண்ட நூல், 'குருபரம்பராப் பிரபாவம்' என்பதாகும். 1919ல் வெளிவந்த இந்நூலின் பதிப்பில், மேற்சுட்டிய கதை இல்லை. 1943ஆம் ஆண்டு வெளிவந்த பதிப்பிலும் இவ்வாறு இல்லை. மேலும், சிவவாக்கியரும் திருமழிசையாழ்வாரும் ஒருவரே என்பதற்கான எந்தக் குறிப்பும் இந்நூலில் கிடையாது. வைணவ சமயத்தாருக்குள்ளேயே, இக்கதையைப் பொறுத்தமட்டில், கருத்துவேறுபாடுகள் இருந்தன; கதை அமைப்பிலும் பல மாறுபாடுகள் உள்ளன. ஆகவே, திருமழிசையாழ்வாரும், சிவவாக்கியரும் ஒருவரே என்று வைணவ உலகம் கருதவில்லை என்பது தெளிவாகிறது.

முருகதாச சுவாமிகள் எழுதிய, புலவர்புராணத்தில், சிவவாக்கியரின் காலம் கி.பி.1877 என்று காணப்படுகிறது. இப்புராணத்தில், குருபரம்பராப் பிரபாவக் கதையை அடிப்படையாகக் கொண்டு, சிவவாக்கியர் கதை சொல்லப்படுவதாகச் சுட்டப்படுகிறது. ஆனாலும், அக்கதையை முற்றிலுமாக ஏற்றுக்கொள்ளாமல், தமக்கு வேண்டியவாறு மாற்றியமைத்துக்கொள்கிறார். அம்மாற்றங்கள் பின்வருமாறு.

1. குருபரம்பரா பிரபாவத்தில் கணிகண்ணன், திருமழிசையாழ்வாரின் அருளாற் பிறந்த சீடனாகக் காட்டப்படுகிறான். ஆனால், புலவர்

புராணமோ, அவனை அரசன் என்று காட்டுகிறது.

2. கடைக்குலஞானி ஒருவர், சிவவாக்கியருக்குச் சில பொருள் கொடுத்து ஞானம்பெறச் செய்தார் என்பது குருபரம்பரா பிரபாவத்தில் இல்லை.

3. சிவவாக்கியரும் திருமழிசையாழ்வாரும் ஒருவரே என்று புலவர் புராணம் சொல்லி இருந்தாலும், குருபரம்பராப் பிரபாவம் பிந்திய பதிப்புகளில் இச்செய்தி இல்லை. எனவே, இக்கதையை மெய்யான வரலாறு என்று ஒருதலையாகத் துணிய முடியாது.

**முரண்பாடுகள்**

கு.அருணாசலக்கவுண்டர் பார்வையில், சிவவாக்கியர், சைவராக இருந்து வைணவராக மாறினார். வடிவேல் முதலியார் எழுத்தாக்கத்தில், சிவவாக்கியர் வைணவராக இருந்து சைவராக மாறியிருக்கிறார். தத்தம் சமயக் கருத்தாக்கங்களை முன்னிறுத்திச் சொல்லப்படும் இவ்வரலாற்றின் மெய்த்தன்மையை அறிய, சித்தர்கள் பாடல்களைக் காணலாம்.

போகர், தமது சத்தகாண்டத்தில், 'சிவவாக்கியர், திருமூலர் மரபினர்' என்று குறிக்கிறார்.

சித்தர் மரபில், தனக்கு முன் வாழ்ந்தவர்களில் சிறந்தவர்களை, அருள் உபதேச அடிப்படையில், தனது முன்னோர் எனக்குறிப்பது வழக்கம். இம்மரபின் அடிப்படையில், திருமூலர் தன்னை, 'நந்தி மரபினர்' என்று காட்டுவார். இதன்படி, சிவவாக்கியரையும் 'திருமூலர் மரபினர்' என்று குறிப்பிடுவது கொள்ளத்தக்கதாகும். மேலும், திருமூலரின் கருத்துகள், யாப்பமைதி மற்றும் சொல்லும் முறைகள், இவரது பாக்களிலும் ஒத்திருப்பதைக் கருத்தில் கொள்ளலாம்.

புலவர்புராண ஆசிரியர் குறிப்பிடும், 'ஆன்மிக உயர்வுக்கு, மேல்கீழ் வேறுபாடுகள், வருணபேதங்கள் ஏற்புடையன அல்ல' என்பதற்கும்,

குறமகளொடு இச்சித்தர் இணைந்து வாழ்ந்ததற்கும் உரிய சுவடுகளை, சிவவாக்கியர் பாடல்களின் வழியே காணமுடிகிறது.

'பறைச்சி போகம் வேறதோ, பனத்திபோகம் வேறதோ' என்ற தொடரும், 'மூங்கில் வெட்டி நாருரித்து' என்ற தொடரும் இவற்றிற்குத் தக்க அகச்சான்றுகளாக அமைகின்றன.

## சிவவாக்கியர் காலம் - சில அறிஞர்கள் கருத்துக்களும் முடிவும்

சித்தர்கள் காலம் குறித்துத் திட்டவட்டமாக முடிவு எடுக்க வழியில்லாதபோதும், அறிஞர்கள், ஊக அடிப்படையில் பல்வேறு கருத்துக்களைத் தெரிவித்துள்ளனர்.

"திருமூலர் காலம் கி.பி.5ஆம் நூற்றாண்டாக இருப்பதாலும், சித்தர்கள் எனப்படுவோர் இன்றளவும் வாழ்வதாலும், சித்தர் காலம் கி.பி. 5ஆம் நூற்றாண்டு தொடங்கி, இன்றுவரை தொடர்வதாக"[51] டாக்டர் இரா. மாணிக்கவாசகம் குறிப்பிடுகிறார். மேலும் இவர், மிக நீண்ட காலப்பகுதியை சித்தர் காலமாகச் சொல்கிறார்.

கி.பி.7ஆம் நூற்றாண்டில் இருந்து, 11ஆம் நூற்றாண்டுக்குள், ஒரு குறிப்பிட்ட காலப்பகுதியில், இந்தியாவில் சமய மறுமலர்ச்சி ஏற்பட்டதாகவும், அம்மறுமலர்ச்சியின் விளைவாக, சைவம், வச்சிராயனா, தாந்திரிகம், மந்திரவித்தை, ரசவாதம், ஹடயோகம் ஆகியவை சிறப்புற்றதாகவும் கூறும் அறிஞர் கமில்சுவலபில், இந்த மறுமலர்ச்சிக் காலத்திலேயே (கி.பி.7-11) தமிழ்நாட்டில், சித்தர் மரபு தோன்றியிருக்கலாம் என்பார்.[52]

சங்ககாலம் முதல் கி.பி.16ஆம் நூற்றாண்டுவரையிலும்கூட, தமிழ் இலக்கியங்கட்குத் துல்லியமான காலவரையறை வகுக்கப்படவில்லை. தமிழ்ப்புலவர்கள் பலரின் காலம் உறுதி செய்யப்படாத, வேறுபட்ட கருத்துக்களாகவே உள்ளன. தம்மை வெளிப்படுத்தி, விளம்பரம் செய்து

கொள்ளாமலும், மேக்குடிமக்களோடு நெருங்கித் தொடர்பு கொள்ளாமலும் வாழ்ந்த சித்தர்களின் காலம், வரலாற்றுக் குறிப்புகளில் இடம்பெறவில்லை. இவ்வகையில் சித்தர் காலமும் கருதுகோள் நிலையிலேயே உள்ளது.

சிவவாக்கியர் காலத்தை ந.சி. கந்தையாபிள்ளை, தம் ‘தமிழ்ப்புலவர் அகராதி’ நூலில், ‘எட்டாம் நூற்றாண்டு?’ என வினாக்குறியிட்டு விட்டு விடுகிறார். இவ்வாறே, தேவநேயப்பாவாணரும், தமது ‘தமிழ் இலக்கிய வரலாறு’ நூலில், ‘7/8ஆம் நூற்றாண்டு?’ என்று வினாக்குறியிட்டே எழுதுகிறார். இவ்விருவருமே காரணங்களையோ, சான்றுகளையோ காட்டாமல், சிவவாக்கியர் காலத்தை 8ஆம் நூற்றாண்டெனக் கருதுகின்றனர்.

‘பாவலர் சரித்திர தீபகம்’ என்னும் நூல், “பட்டினத்தடிகள், தத்துவராயர், சிவஞானவள்ளல், சீகாழி மறைஞான சம்பந்தர், தாயுமானவர் ஆகியோர் சுட்டும் சிவவாக்கியரும், சிவவாக்கியம் எழுதிய சிவவாக்கியரும் ஒருவரேயாகவும், ஒரேநூலாகவும் இருப்பின், சிவவாக்கியர் காலம் பதினோராம் திருமுறையில் இடம்பெற்றுள்ள பட்டினத்தடிகளுக்கு முற்பட்டதாக இருக்க வேண்டும்”[53] என்கிறது.

இங்கு, பட்டினத்தடிகளின் காலத்தை அளவுகோலாகக் கொண்டு, சிவவாக்கியர் காலத்தைப் 14ஆம் நூற்றாண்டு என்று இந்நூல் குறிப்பிடுகிறது.

“தமிழ்நாட்டில், நாயக்கர் ஆட்சி நிலைபெற்ற 14ஆம் நூற்றாண்டுக் காலத்தில்தான், சிற்றிலக்கியங்களும் தலபுராணங்களும் தோன்றியதாகவும், அந்த 14ஆம் நூற்றாண்டில்தான் சித்தர் பாடல்களும் தோன்றியிருக்கவேண்டும்” என்றும் கூறுவார் நீதிபதி வி.பலராமய்யா.[54]

“சிவவாக்கியர், பட்டினத்தார், பத்திரகிரியார், இடைக்காடர், அழுகணிச் சித்தர், பாம்பாட்டிச் சித்தர், அகப்பேய்ச் சித்தர் ஆகியோரைச் சிறப்புடைய சித்தர்கள் எனச் சுட்டி, அவர்கள் கி.பி. 14-15ஆம் நூற்றாண்டுக் காலத்தில் வாழ்ந்தனர்” என முடிவு கட்டுகிறார் செயா.[55]

“சிந்துப்பாக்கள் இயற்றிய சித்தர்களின் காலம், சிந்துப்பாக்கள் தோன்றிய 15ஆம் நூற்றாண்டு” எனக் கருதுவார் பேராசிரியர் அ.கி.பரந்தாமனார்.[56]

அறிஞர் ஏ.வி. சுப்பிரமணிய அய்யர், “சித்தர்களுள் திருமூலர், சிவவாக்கியர், பட்டினத்தார், பத்திரகிரியார் ஆகியோரை முதற்சித்தர்களாகக் கொண்டு, அவர்கள் கி.பி. 10ஆம் நூற்றாண்டுக்குள் வாழ்ந்தவர்கள்” என்று உரைப்பார்.[57] இவர், தமது ஆங்கில நூலில், சிவவாக்கியர் காலம், கி.பி.10 நூற்றாண்டு எனக் கூறிப் பின்வரும் பட்டினத்தார் பாடலைக் காட்டுகிறார்.

“அத்தகு செல்வத் தவமதித் தருளிய
சித்தமார் சிவவாக்கிய தேவரும்”[58]

என்பது அப்பாடல். சிவவாக்கியர் பாடல்களில் அவர் செல்வத்தை அவமதித்ததற்கான நேரடிக் குறிப்புகள் இல்லை. அதனால் இப்பாடலில் கூறப்பட்ட கருத்து ஏற்புடையதன்று.

வரலாற்றுப் பேராசிரியர் கே.கே. பிள்ளை, “சித்தர்களின் காலம் கி.பி.13ஆம் நூற்றாண்டு” என்கிறார்.[59]

“சித்தர்களில் பலர், கி.பி. 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தனர்” என்று மு.வ. அறுதியிட்டுக் கூறுகிறார்.[60] ஆனால், இவரும் சிவவாக்கியரின் காலத்தை அறுதியிடவில்லை.

‘இலக்கிய வரலாறு’ எழுதிய மு.அருணாசலம், “சிவவாக்கியர் கி.பி.14ஆம் நூற்றாண்டினர்” என முடிவு செய்து, பின்வரும் காரணங்களைச் சுட்டுகிறார்.

1. சிவவாக்கியர், விநாயகர் அகவல் பாடிய ஔவையாருக்கும் பிற்பட்டு, 14ஆம் நூற்றாண்டின் இறுதி, 15ஆம் நூற்றாண்டின் தொடக்கம் ஆகிய காலத்தில் வாழ்ந்தவர்.
2. தத்துவராயர் காலமாகிய 15ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் சிவவாக்கியம் பலரும் அறிந்த நூலாக இருந்தது.

3. 15ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் வாழ்ந்த சிவஞான வள்ளல் சிவவாக்கியரைக் குறிப்பிடுவதால், அவருக்கு முந்தியவர் சிவவாக்கியர் என்பது உறுதியாகிறது.

4. 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மறைஞான சம்பந்தர், சிவஞானசித்தியார் சுபக்கத்தின் உரையில், சிவவாக்கியம் 90ஆவது பாடலை எடுத்துக்காட்டுவதால், அவருக்கு முற்பட்டவர் என்பது தெளிவு.

5. சிவவாக்கியர் மவுனஅஞ்செழுத்தைப் பற்றிக் குறிக்கிறார். இது 'கொடிக்கவி' கூறும் பேசாவெழுத்தாகும் என்பர். அதனால், கொடிக்கவி தோன்றிய காலம் 14ஆம் நூற்றாண்டு எனில், அக்காலத்தை ஒட்டியோ, பின்போ சிவவாக்கியம் தோன்றியிருத்தல் கூடும்.

6. சிவஞானிகளுக்கு அன்னதானம் செய்வது பற்றிச் சிவவாக்கியர் கூறுவார். இக்கருத்தும் பிற்காலத்ததேயாம்.

7. சிவவாக்கியர், ஞானபாதங்கள் நான்கையும் குறிக்கிறார். மற்றும் ஞானியர் எய்தும் சாலோகம், சாரூபம், சாமீபம், சாயுச்சியம் ஆகிய நிலைகளையும் குறிக்கிறார்.

8. யோகநெறியில் வற்புறுத்தப்படும் வாசியைப் பற்றி சிவவாக்கியர் பல இடங்களில் கூறுகிறார். இவையெல்லாம் கி.பி. 10ஆம் நூற்றாண்டில் மிகுதியும் வற்புறுத்திக் கூறப்படாத செய்திகளாகும்.

9. சிவவாக்கியர் பாடலில், 'குலாமர்' என்ற சொல் இடம்பெறுகிறது. "கோயிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே" என்ற பாடலில் இடம்பெறும் இச்சொல்லுக்கு, 'அடிமை' என்று பொருள். இது முகமதியர் ஆட்சிக்காலத்தில் வந்தேறிய சொல். முகமதியர் தென்னகத்திற்கு வந்தது, கி.பி. 14ஆம் நூற்றாண்டாகும்.[61]

மேற்சுட்டிய கருத்துக்களை, உள்வாங்கிக் கொண்டு மேலாய்வு செய்யும்போது, பின்வரும் செய்திகளும் அறியக் கிடைக்கின்றன.

1. சைவசமயக் குரவர் நால்வரின் காலத்திற்குப் பின், திருத்தலங்களைக் காண்பதும், தீர்த்தங்களில் நீராடுவதும் வற்புறுத்தப்பட்டன. நாயன்மார்களும், ஆழ்வார்களும் புண்ணியத் தலங்களைப் பற்றிப் பாடல்கள் இயற்றியுள்ளனர். இந்த அடிப்படையில், தலயாத்திரை, தீர்த்த யாத்திரைகள் மேற்கொள்வது இன்றியமையாத ஒழுக்கங்களாகச் சமயாச்சாரியர்களால் வலியுறுத்தப்பட்டன. ஆனால், சிவவாக்கியர், இவ்விரண்டையும் கண்டிக்கிறார்.

சாத்திர நூல்கள், கி.பி.12 முதல் 14ஆம் நூற்றாண்டுகளுக்குள் தோன்றின. இவற்றில் கண்ட செய்திகளைச் சிவவாக்கியர் மறுப்பதால், இவரது காலம் கி.பி. 14ஆம் நூற்றாண்டை ஒட்டி இருக்க வேண்டும்.

2. திருமுறை பாடியோர், இறைவனைக் குருவாகக் குறிப்பிட்டுள்ளனர். குருவின் மூலமே உபதேசம் பெறவேண்டும் என்பது, மெய்கண்ட சாத்திர நூல்களில் சொல்லப்பட்ட மரபாகும். இச்சொற்களை சிவவாக்கியர்,

"குருவிருந்து சொன்னவார்த்தை குறித்துநோக்க வல்லீரேல்"[62]
"குருக்கொடுத்த மந்திரம் கொண்டுநீந்த வல்லிரேல்"[63]
"கூடிநின் றுலாவுமே குருவிருந்த கோலமே"[64]

தம்பாடல்களில் எடுத்தாண்டுள்ளார்.

3. ஒன்றல்லோ,[65] சாவல்,[66] முக்கிலே,[67] கூதரை,[68] ஏதடா,[69] வாசி,[70] பிரக்ஞை[71] என்ற வழக்குச்சொற்கள் இவர் பாடல்களில் இடம்பெறுகின்றன. இவை மிகவும் பிற்கால வழக்கில் பயின்று வருவனவாகும்.

ஆகவே, மேற்சுட்டிய அகச்சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு பார்க்கிறபோது, சிவவாக்கியரின் காலம் கி.பி. 10ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டது என்பது உறுதியாகிறது.

மேலும், மு.அருணாசலம் குறிப்பிட்டுள்ள காரணங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, சிவவாக்கியர் காலம், கி.பி.14ஆம் நூற்றாண்டு என்பது நிறுவப்படுகிறது.

## சிவவாக்கியர் வாழ்ந்த மலையும் சமாதித்தலமும்

சித்தர் சிவவாக்கியர் வாழ்ந்த இடம் குறித்தும், அவருடைய சமாதி தலம் குறித்தும் உறுதியான பதிவுகள் இல்லை. ஆயினும், ஆய்வாளர் மேற்கொண்ட களஆய்வின்மூலம் கீழ்க்காணும் உண்மைகள் கண்டறியப் பெற்றுள்ளன.

கொங்கு மண்டலத்தைச் சார்ந்த, ஈரோடு மாவட்டத்தில் உள்ள பகுதி சிவன்மலையாகும். இது காங்கேயத்திலிருந்து திருப்பூர் செல்லும் வழியில், ஐந்து கி.மீ. தொலைவில் உள்ளது. இங்குள்ள மலைமேல் சிவவாக்கியர் பலகாலம் வாழ்ந்து தவம்புரிந்ததால் இம்மலை, 'சிவவாக்கியர் மலை' என்று பெயர்பெற்றது. 'சிவவாக்கியர் மலை' என்பது நாளடைவில் மருவி, 'சிவமலை' என்று ஆனது. பின்னர், 'சிவன்மலை' என்று தற்போது அழைக்கப்பட்டு வருகிறது.

இவ்வாறு, 'சிவன்மலை' என்று அழைக்கப்பட்டாலும், இங்கு சிவன் கோயில் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. இம்மலையில் சிவவாக்கியர் வாழ்ந்த குகையும், அவர்நினைவாக அமைக்கப்பட்ட சிலையும், இருள்சூழ்ந்த பகுதிக்குள் இன்றும் இருக்கின்றன. மேலும், இலக்குமண பாரதியாரால் இயற்றப்பட்ட, 'சிவமலைக் குறவஞ்சி' என்னும் நூல் இத்தலத்தினைப் பற்றியதாகும். ஆகவே, இம்மலை சிவவாக்கியர் வாழ்ந்த தலம் என்று கருதுவது பொருத்தப்பாடுடையதாக அமைகிறது. [72]

சித்தர் சிவவாக்கியர் நிறைவாகச் சீவசமாதி அடைந்த இடம், பெருங்களூர் என்னும் ஊராகும். இவ்வூர், புதுக்கோட்டையிலிருந்து தஞ்சாவூர் செல்லும் நெடுஞ் சாலையில் உள்ளது. இவ்வூருக்குப் புறத்தே உள்ள ஓர் அடர்ந்த வனத்துள், ஒரு காட்டுக் கோயில் இருக்கிறது. இதனுள் சிவவாக்கியர் சமாதி மண்டபம் அமைந்திருக்கிறது. அன்றிலிருந்து இன்றுவரை அப்பகுதி மக்கள் ஆண்டுதோறும் தை மாதம் மக நட்சத்திரத்தன்று சிவவாக்கியர் விழாவைச் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர்.[73]

## சான்றெண் விளக்கம்


1. திருமூலர், திருமந்திரம், பா.125
2. சிதம்பரனார், சாமி. சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம், ஞானம், ப. 23
3. கி.மகாதேவன் (ப.ஆ), சித்தர் கண்ட செம்பொருள், ப.18
4. Geroge Briggs Weston, Gorakhnath And the Kanphata Yogis
5. மாடசாமி, ச. பாம்பாட்டிச் சித்தர், ப.70
6. தொல்காப்பியர், தொல்காப்பியம், பா. 1484
7. திருவள்ளுவர், திருக்குறள், பா. 28
8. புறநானூறு, 192: 8-11
9. உ.வே.சாமிநாத அய்யர் (ப.ஆ), குறுந்தொகை, வெள்ளிவீதியார் பா.130 ப.26
10. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், 11, 95, 102, 103
11. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், 10, 177-187
12. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், 10, 177 அடியார்க்கு நல்லார் உரை
13. சீத்தலைச்சாத்தனார், மணிமேகலை, 10: 85
14. சீத்தலைச்சாத்தனார், மணிமேகலை, 26: 206-207
15. சீத்தலைச்சாத்தனார், மணிமேகலை, 29: 194-196
16. சீத்தலைச்சாத்தனார், மணிமேகலை, 24: 46-47
17. மண்டல புருடர், சூடாமணி நிகண்டு, 2: 4
18. உ.வே.சாமிநாத அய்யர் (ப.ஆ), பெருங்கதை, 34, 86-88
19. திருமூலர், திருமந்திரம், பா.54
20. மேலது, பா. 81
21. மேலது, பா. 2969
22. மேலது, பா. 1582
23. திருஞான சம்பந்தர், தேவாரம், பா. 1.96.1 - 1036
24. திருநாவுக்கரசர், தேவாரம், தி.கு.தொகை பா. 5:4
25. மாணிக்கவாசகர், திருவாசகம், பி.பத்து. 8
26. கே.சுப்பிரமணியபிள்ளை (ப.ஆ), திருநறையூர் திருப்பதிகக் குறிப்புரை,ப.145

27. திருஞான சம்பந்தர், தேவாரம், 2ஆம் திருமுறை, 65:3
28. திருநாவுக்கரசர், தேவாரம், பொது, பசுபதிவிருத்தம், பா.110
29. சுந்தரர், தேவாரம், திருத்தொண்டர் தொகை, பா.10
30. ஊரன் அடிகள் (ப.ஆ), திருவருட்பாத் திரட்டு, ப.47
31. பட்டினத்தார், சித்தர்பாடல்கள், பொது பா.1
32. பட்டினத்தார், சித்தர்பாடல்கள், பொது பா.30
33. ராமநாதன். அரு., (ப.ஆ), சித்தர்பாடல்கள், ப.7
34. சச்சிதானந்தர், சச்சிதானந்தர் சுழுமுனைச் சூத்திரம், பா.20-21
35. தாயுமானவர், தாயுமானவர் பாடல்கள், சித்தர்கணம்.
36. திருவேங்கடபாரதி, பாரதிதீபம், ப.99
37. மாணிக்கவாசகம், இரா., நம்நாட்டுச் சித்தர்கள், (மே.கோ.) பக்.2-3
38. மாணிக்கவாசகம், இரா., நம்நாட்டுச் சித்தர்கள், (மே.கோ.) ப.173
39. மாணிக்கவாசகம், இரா., நம்நாட்டுச் சித்தர்கள், (மே.கோ.) பக்.143
40. மாணிக்கவாசகம், இரா., நம்நாட்டுச் சித்தர்கள், (மே.கோ.) பக்.167
41. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல்கள், பா.1
42. மாணிக்கவாசகம், இரா., நம்நாட்டுச் சித்தர்கள், ப.167
43. சித்தர் பாடல்கள், பாம்பாட்டிச் சித்தர் பாடல்கள், பா.95
44. A Tamil Dictionary of Proper Names, Page No. 223
45. ராகவநாயகர். பி.ஆர்., (ப.ஆ.) மஹாமகத்துவம் பொருந்திய போகமுனிவர் சத்தகாண்டம், ப.942
46. மேலது, ப.922
47. மேலது, பக். 913/ருஅ0-சகூஅக
48. முருகதாசர், புலவர் புராணம், ப. 25-41
49. மா. வடிவேலு முதலியார், (உ.ஆ.) சிவவாக்கியர் பாடல். ப.
50. கு. அருணாசலக்கவுண்டர், ..........
51. மாணிக்கவாசகம், இரா., நம்நாட்டுச் சித்தர்கள், ப. 218
52. Kamil Zvelebil. V., The poets of the Powers, Pages No. 72-73
53. சதாசிவம்பிள்ளை.அ., பாவலர் சரித்திர தீபகம், ப. 223
54. வி.பலராமையா, சித்தர் மெய்ப்பொருள், ப.
55. Jeya. P., Works of Cittars and their place in Hindu Religious Thought and in Tamil Literature. Page No. 386

56. பரந்தாமனார். அ.கி., கவிஞராக, ப.
57. Subramania Ayyar. A.V., The Poetry and the Philosophy of the Tamil Siddhars, Page.No.39
58. மேலது, ப.39
59. பிள்ளை.கே.கே., தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், பக்.409-410
60. வரதராசனார். மு., தமிழ் இலக்கிய வரலாறு, பக்.178-179
61. அருணாசலம். மு., தமிழ்இலக்கிய வரலாறு, பக். 349-359
62. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல், பா.64
63. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல், பா.245
64. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல், பா.389
65. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல், பா.225
66. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல், பா.154
67. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல், பா.414
68. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல், பா.171
69. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல், பா.35
70. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல், பா.441
71. சிவவாக்கியர், சிவவாக்கியர் பாடல், பா.158
72. சிவன்மலை களஆய்வு
73. பெருங்களூர் களஆய்வு

# சிவவாக்கியர் பாடல்களில் சைவசித்தாந்தக் கூறுகள்

சிவவாக்கியர் தெய்வ நம்பிக்கை கொண்டவர். அவர்தம் தெய்வப்பற்று, சைவசமயத்தின் அடிப்படையில் அமைந்தது என்பது கிடைத்திருக்கின்ற அவரது பாடல்களின்வழி தெரியவருகின்றது. தம் காலத்திற்கு முன்னர் தோன்றிய, சைவத்திருமுறைகளிலும் சைவ சித்தாந்த சாத்திரங்களிலும் அவருக்குப் பயிற்சி இருந்தமையும் புலனாகின்றது.

அவர்தம் பாடல்களில் இடம் பெற்றுள்ள சைவசமயக் கருத்துகள், முன்னோர் மொழியைப் பொன்னெனப் போற்றியவையாகும். அந்த அடிப்படையில் அவரின் பாடல்களில் இடம்பெற்றுள்ள தத்துவக் கருத்துகளைத் திருமுறைகளோடும் சாத்திர நூல்களோடும் ஒப்பிட்டுக் காட்டலாம்.

## சைவம் - சித்தாந்தம்

சைவ சித்தாந்தம் என்னும் தத்துவப் பிரிவு சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடுகின்ற சமயநெறி. இது சைவ சமயத்துக்கு அடிப்படையாக விளங்குகிறது. சித்தாந்தம் என்பது சிந்தித்துக் கண்டறிந்த முடிவான உண்மை எனப்பொருள்படும். (அந்தம் - முடிவு). ஆன்மீகம் தொடர்பான பல்வேறு கருத்துக்களையும் ஆராய்ந்து சிந்தித்து முடிந்த முடிவாகக் காணப்பட்டது சைவசித்தாந்தம்.[1]

சைவசமயக் கொள்கைகளைச் சைவத்திருமுறைகள் தமிழகத்தில் பதிவு செய்தன. சாத்திர நூல்கள், அக்கருத்துகளைத் தொகுத்து, வகைப்படுத்தி இலக்கணம் போலத் தந்தன. திருமுறைகளில் கொள்கைகளாக இடம்பெற்றவை, சாத்திர நூல்களில் தத்துவங்களாக வகுக்கப்பட்டபொழுது சித்தாந்தம் என்ற அமைப்பு உருவாகியது. சித்தாந்தம் என்ற சொல்லிற்கு ‘முடிந்தமுடிவு’ என்பது பொருளாகும்.

இந்த அடிப்படையில், சைவசமயத்தின் பதி, பசு, பாசம் என்ற முப்பொருள்களை ஆராய்ந்து, அவற்றின் பொதுச் சிறப்புகள் இவைதாம் என்று இலக்கணமாக வகுத்து, முடிந்த முடிவாகத் தந்திருப்பதால் சைவ சமயக் கொள்கைகள், 'சைவ சித்தாந்தம்' என்று அழைக்கப் பெறுகிறது.[2]

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்கள், பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள்கள், ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்கள், சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நாற்பாதங்கள், தாசமார்க்கம், சத்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்ற நான்கு வழிபாட்டு நெறிமுறைகள், சமையம், விசேஷம், நிர்வாணம், அபிஷேகம் என்ற நான்குவகை தீட்சை முறைகள், சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்ற நான்கு வகை முக்திகள், திருவருள் வைப்பு, அணைந்தோர் தன்மை, ஜீவன் முத்தர் இயல்பு, பசு இலக்கணம், பதி இலக்கணம், பாச இலக்கணம், ஆறாதாரம், சகலர், பிரளாயகரர், விஞ்ஞானகலர் என்ற மூவகை ஜீவராசிகள் என அருளாளர்களுடைய அனுபவங்களின் தொகுப்பு சைவ சித்தாந்தமாக அமைந்துள்ளது.[3]

### முப்பொருள் உண்மை

சைவசித்தாந்தத் தத்துவங்களில் முதன்மை பெறுவது பதி, பசு, பாசம் என்ற முப்பொருள்களின் உண்மை நிலை ஆகும். பதி, பசு, பாசம் என்ற சொற்கள் இறை, உயிர், தளை என்று குறிப்பிடப் பெறுகின்றன. பொருள்கள் அனைத்தையும் இம்மூன்றில் அடக்கி, அவற்றின் உண்மைத் தன்மையில் அவற்றின் பொதுச்சிறப்பு இலக்கணங்களையும், சாத்திர நூல்கள் வரையறுத்துத் தருகின்றன.

'சைவ சித்தாந்த சாத்திரங்கள், திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞானசித்தியார், இருபாஇருபஃது, உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறிவிளக்கம், சங்கற்ப நிராகரணம் என்பனவாகும்.'[4]

இச்சாத்திர நூல்கள் 13ஆம் நூற்றாண்டையும் அதற்கு முன்னர் உள்ள காலத்தையும் சேர்ந்தவை ஆகும். எனவே, பதினான்காம் நூற்றாண்டில் தோன்றிய சிவவாக்கியர், அச்சாத்திரங்களின் கருத்துகளை ஒட்டியே, தனது பாடல்களில் தத்துவங்களைத் தந்திருக்கிறார்.

சிவவாக்கியர் உட்பொருள் உண்மைகளைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது,

ஆனதே பதியது யரற்றதே பசுபாசம்
போனதே மலங்களும் புலன்களும் வினைகளும்
கானகத்தி லிட்டதீயிற் காற்றுவந் தடுத்தலோ
வூனகத்தில் வாயுவன்னி யொன்றியே யுலாவுமே[5]

என்று குறிப்பிடுகிறார். இப்பாடலில், முப்பொருளும் இடம்பெற்றிருப்பதைக் காண முடிகிறது. இப்பாடலில் இடம்பெற்ற முப்பொருள்களும், தனித்தனிப் பொருள்களேயாகும். இவற்றில் எந்தப் பொருளும் தோன்றுவதும் இல்லை, அழிவதும் இல்லை என்பதால்தான் அவை தோற்றமில்லாதவை (அநாதி) என்று சித்தாந்தம் குறிப்பிடும். இதையே சிவவாக்கியரும்,

அண்ணலார் அநாதியாய் அநாதிமு னநாதியாய்
பெண்ணுமாணு மொன்றலோ பிறப்பதாகு முன்னலோ[6]

என்ற பாடலில் இறைவன் அநாதியானவன் என்று குறிப்பிடுகின்றார்.

சோதியுள் ஒளியுமாய்த் துரியமோடு அதீதமாய்
ஆதிமூலம் ஆதியாய் அமைந்ததே சிவாயமே[7]

இப்பாடலில், ஆதிமூலமே ஆதியாய் அமைந்தது சிவாயமே என்று குறிப்பிடுவதால் ஆதிமூலத்திற்கும் அநாதியாய் இறைவன் விளங்குகிறான் என்பது பெறப்படுகிறது. இதனையே, சைவசித்தாந்த சாத்திரநூல்களிளுள் ஒன்றான சிவஞான சித்தியார்,

ஒருவனோடு ஒருத்தி ஒன்றென்
றுரைத்திடும் உலகம் எல்லாம்
வருமுறை வந்து நின்று
போவதும் ஆதலாலே
தருபவன் ஒருவன் வேண்டும்
தான்முதல் ஈறும் ஆகி
மருவிடும் அநாதி முத்த
சித்துரு மன்னி நின்றே[8] (பாடல் 21)

என்று குறிப்பிடுகிறது. இக்கருத்தையே திருமூலரும்,

பதிபசு பாசம்எனப் பகர்மூன்றில்
பதியினைப் போல்பாசம் அநாதி[9]

என்று குறிப்பிடுகிறார். எனவே, முப்பொருள்களும் அநாதியாய் எப்பொழுதும் உள்ளன என்பது பெறப்படுகிறது.

## பதியின் தன்மைகள்

பதி என்பதற்கு, 'காக்கிறவன்' என்று பொருள். பா-காத்தல்; தி-முதற்பொருள் விகுதி. பசுக்களைப் பாசத்திலிருந்து விடுவித்துக் காத்தல் பற்றி முதல்வன் பதி எனப்படுகிறான்.[10]

முப்பொருள்களுள் முதன்மையான பதியாம், இறைவனின் தன்மைகளைச் சிவவாக்கியர் ஆங்காங்கு சுட்டிச் செல்கிறார். அவையனைத்தையும் தொகுத்தால் சைவசமயக் கடவுளின் பெருமைகள் புலப்படுகின்றன. முப்பொருள்களுள் முதன்மையானவன் இறைவனே என்பதனை,

எத்திசைக்கும் மெவ்வுயிர்க்கும் மெங்களப்ப னெம்பிரான்
முத்தியான வித்துளே முளைத் தெழுந்த செஞ்சுடர்[11]

என்ற பாடல்மூலம் பயிர்களின் விளைவுக்கு விதை காரணமாக இருப்பதைப்போல, எப்பொருளுக்கும் இறைவன் முதன்மையாக விளங்குகிறான் என்று சுட்டுகிறார். இக்கருத்தினைச் சாத்திர நூல்களுள் ஒன்றான திருவருட்பயன்,

அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில்இறை நிற்கும் நிறைந்து[12]

என்று குறிப்பிடுகிறது. இதையே சிவவாக்கியர், ‘எத்திசைக்கும் எவ்வுயிர்க்கும் எம்பிரான் செஞ்சுடராய் விளங்குகிறான்’ என்று கூறியிருக்கத் திருவருட்பயன் ‘எங்கும் நிறைந்திருக்கிறார்’ என்று குறிப்பிடுவது கருத்தொற்றுமையைத் தருவதாகும்.

இறைவனே முதற்பொருள். பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள்களுள் பதியே எஞ்சிய இரண்டின்மேல் ஆதிக்கமும் ஆணையும் கொண்டுள்ளது.[13]

எங்கும் நிறைந்திருக்கின்ற இறைவன் எல்லாவற்றிற்கும் முதன்மையானதோடும் ஒருவனாகவே விளங்குகிறான் என்பதையும் சிவவாக்கியர் குறிப்பிடுகிறார்.

என்னையற்ப நேரமு மறக்கலாத நாதனே
ஏகனே இறைவனே யிராசராச ராசனே[14]

இப்பாடலில், இமைப்பொழுதும் மறக்க இயலாத நாதனாம் இறைவனை, ‘ஏகனே’ என்று சிவவாக்கியர் குறிப்பிடுவது சிறப்புடைத்தாம்.

ஏகனாக இருக்கும் இறைவன், அருள்தொழில்களால் பிரமன், திருமால், உருத்திரன் என்ற வடிவில் பேசப்பெற்றாலும், அவன் ஒருவனே என்பதைச் சிவவாக்கியர் வலியுறுத்துகிறார்.[15] இக்கருத்தினைத் திருமூலரும், ‘ஒருவனே தேவன்’[16] என்று கூறுவதும் பொருத்தமுடையதாகும். திருவாசகத்தில்

சிவபுராணத்தில், 'ஏகன், அநேகன் இறைவன்'[17] என்று மாணிக்கவாசகர் கூறுவதும் இங்கு நினைவுகூரத் தக்கதாகும்.

எல்லா இடங்களிலும் விளங்குகின்ற இறைவன் அவ்வவ்விடங்களில் அவற்றோடு கலந்தே இருக்கின்றான் என்பதைச் சிவவாக்கியர் வலியுறுத்துகிறார்.

ஓடியோடி யோடியோடி யுட்கலந்த சோதியை
நாடிநாடி நாடிநாடி நாட்களுங் கழிந்துபோய்[18]

என்னும் பாடலில், அந்தந்த உயிர்களிடத்திலும் அந்தந்த இடங்களிலும் இறைவன் இரண்டறக் கலந்திருக்கிறான் என்பதை, 'ஓடி' என்ற சொல்லை அடுக்கடுக்காக நான்குமுறை சொல்லி, 'உட்கலந்த சோதி' என்று இறைவனைக் குறிப்பிடுகின்றார். இக்கருத்து சாத்திர நூல்களிலும் இடம் பெற்றிருக்கின்றது. சிவஞான சித்தியார்,

உலகெலாம் ஆகி வேறாய்
உடலமாய் ஒளியாய் ஓங்கி[19]

என்று காட்டுகிறது. இதனைச் சிவஞானபோதம் இரண்டாம் சூத்திரம், 'அவையே தானே ஆய்'[20] என்று குறிப்பிடுகிறது.

எனவே, இறைவன் எல்லா இடத்திலும் இருப்பதைச் சாத்திர நூல்களும், அவ்வப்பொருளாகவே இறைவன் அமைந்து காட்சி தருகிறான் என்பதை சிவவாக்கியரும் கூறும் கருத்தொற்றுமை தெற்றெனப் புலப்படுகிறது.

எல்லா இடத்திலும் அவ்வப்பொருளாய் இருக்கும் இறைவன் ஐம்பூதங்களாய், உறவுமுறைகளாய், உலகப் போகப்பொருள்களாய் விளங்குகின்றான் என்பதைச் சிவவாக்கியர் பல பாடல்களில் குறிப்பிடுகிறார். அப்பாடல்கள் மூலம் இறைவன் இல்லாத பொருள்களே (உயர்திணையானும் அஃறிணையானும்) இல்லையென்றே கூறலாம். அந்த அளவிற்குக் காணும் பொருளிலும், கேட்கும் பொருளிலும் உணரும் பொருளிலும் இறைவனைக் கண்டு மகிழ்கிறார் சிவவாக்கியர்.

இந்த அடிப்படையில் பார்க்கும்பொழுது உலகப் பொருள்களாய் இறைவனைக் காணலாமே தவிர, அவற்றிலிருந்து வேறுபடுத்தி இறைவனைக் காணமுடியாது. இவ்வாறு இறைவனைக் காண்பதால் இன்றைய உலகில் பெரிதும் பேசப்படுகிற மனிதநேயத்திற்கு ஆன்மீகம் வழிவகுத்துத் தருகிறது என்று எண்ணத் தோன்றுகிறது.

மண்ணும்நீ விண்ணும்நீ மறுகடல்க ளேழும்நீ
எண்ணும்நீ எழுத்தும்நீ யிசைந்தபண் ணெழுத்தும்நீ
கண்ணும்நீ மணியும்நீ கண்ணுளாடும் பாவைநீ[21]

தந்தைதாய் தமரும்நீ சகலதே வதையும்நீ
சிந்தைநீ தெளிவுநீ சித்திமுத்தி தானும்நீ
விந்துநீ விளைவுநீ மேலதாய வேதம்நீ
எந்தைநீ யிறைவநீ யென்னையாண்ட வீசனே[22]

என்பன மேற்கூறிய கருத்தொற்றுமைக்குரிய சிவவாக்கியரின் பாடல்களாகும். சிவவாக்கியர் போலவே, திருமுறைகளும் இறைவனை எல்லாப் பொருள்களிலும் காண்கின்றன.

அப்பன்நீ அம்மைநீ ஐய னும்நீ
அன்புடைய மாமனும் மாமி யும்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொரு ளும்நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓரூ ரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவுந் தோற்று வாய்நீ
துணையாயென் நெஞ்சந் துறப்பிப் பாய்நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத் து(ம்)நீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே.[23]

என்று தேவாரமும்,

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்
கோனாகி யான்எனதென் றவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே[24]

என்று திருவாசகமும் இறைவனின் யாவுமாகி நிற்கும் பரந்த தன்மையைப் புலப்படுத்துகின்றன.

எல்லாமாய் விளங்கும் இறைவனுக்குரிய குணங்களை, தன்மைகளை சைவ சித்தாந்தம் எண்குணங்களாகக் குறிப்பிடும். திருக்குறள்,

கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை[25]

என்று குறிப்பிடும். இக்குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகர் எண்குணங்கள் எவை எவை என்பதனைக் குறிப்பிடுவார். அதில் ஒரு குணம், தூய உடம்பினன் ஆதல் என்பதாம்.

இதனைச் சிவவாக்கியர்,

சாமம்நாலு வேதமும் சகலசாத் திரங்களும்
சேமமாக வோதினும் சிவனைநீ ரறிகிலீர்
காமநோயை விட்டுநீர் கருத்துளே யுணர்ந்தபின்
ஊனமற்ற காயமா யிருப்பனெங் களீசனே[26]

என்ற பாடலில் குறிப்பிடுகிறார். வேத சாத்திரங்களை ஓதுவதால் மட்டும் இறைவனைக் கண்டுவிட முடியாது. ஆனால், வேத சாத்திரங்களை ஓதாமலேயே தம்முள் உண்மையாக உணர்ந்தால் இறைவன் உள்ளத்துள் இருப்பதை உணரலாம். உள்ளத்தால் பொய்யாத இந்நிலையை எய்துவதால், இறைவன், தூய உடம்பினனாய் காட்சி தருகிறான் என்கிறார் சிவவாக்கியர். இங்கு தூய வடிவம் என்பதை, சைவ சித்தாந்தம் உருவவழிபாடாகக் குறிப்பிடுகிறது.

இத்தகைய நிலைகளில் இறைவனைக் காணுகிற சிவவாக்கியர் இறைவன் அனைத்துப் பொருள்களோடும் கலந்திருப்பதை உவமை வாயிலாக வெளிப்படுத்தித் தெளிவாக்குகிறார்.

உள்ளிலும் புறம்பினு முலகமெங் கணும்பரந்
தெள்ளி லெண்ணெய் போலநின் றியங்குகின்ற வெம்பிரான்[27]

எள்ளகத்தி லெண்ணெய்போல வெங்குமாகி யெம்பிரான்
னுள்ளகத்தி லேயிருக்க ஊசலாடு மூடர்காள்[28]

இப்பாடல்கள்மூலம் இறைவன், எள்ளில் இருக்கின்ற எண்ணெய் போலக் கலந்திருக்கின்றான் என்பதை இறைக்குரிய தத்துவமாகக் காட்டுகிறார். மற்றவர்கள் பூவில் நாற்றம், கண்ணில் ஒளி, பாலில் நெய், விறகில் தீ என்றெல்லாம் இறைவனுக்கு உவமையாகக் காட்டியிருக்கிறார்கள். ஆனால் சிவவாக்கியரோ, மக்களின் வாழ்வில் நாள்தோறும் பயன்படுகிற எண்ணெய்ப் பொருள்களைக் காட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

அக்காலத்தில் எள்ளை, கைகளால் பிழிந்து எண்ணெய் எடுப்பது வழக்கம். இது ‘கைபிழி எண்ணெய்’ என்று குறிக்கப்பெறும். மானிடரின் கரங்களால், முயற்சி செய்து எள்ளிலிருந்து எண்ணெய் வேறாகவும், சக்கை வேறாகவும் பிரித்தெடுக்கப்படுவதுபோல, தன்னுள் கலந்திருக்கும் இறைவனை, அகவழிபாட்டின்மூலம் அடையமுடியும் என்பதற்காக இவ்வுவமையைப் பயன்படுத்துகிறார்.

செய்யதெங்கி லேயிளநீர் சேர்ந்தகார ணங்கள்போல
ஐயன்வந்து என்னுளம் புகுந்துகோயில் கொண்டனன்[29]

இப்பகுதியில் தென்னங்காயின் உள்ளே ஊறும் இளநீர் தானே தோன்றுவதாகும். அதில் வேறுயாரும் சேகரிக்கமுடியாது. அதுபோல ‘இறைவன் தானே வந்து தன் உள்ளம் குடிபுகுந்து கோயிலாகக் கொண்டான்’

என்னும் சிவவாக்கியரின் கூற்று, இறைவனின் எளிவந்த கருணையை உணர்த்துவதாக அமைந்துள்ளது. மேலும்,

கோயிலாவ தேதடா குளங்களாவ தேதடா
கோயிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே
கோயிலும் மனத்துளே குளங்களு மனத்துளே
ஆவதும் அழிவதும் இல்லையில்லை இல்லையே[30]

என்ற பாடலின்மூலம், கட்டியிருக்கிற கோயில்கள் அல்லது குளங்கள் அன்பு வழிபாட்டிற்கு இல்லையாகில் அவை இறைவனுக்கு உகந்தவை அல்ல சிறந்த மனம்தான் கோயிலாகவும் குளங்களாகவும் அமைய வேண்டும் என்கிறார். இதனாலேயே திருமூலர்,

உள்ளம் பெருங்கோவி லூனுடம் பாலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே[31]

என்று இறைவனின் திருக்கோயிலை மானிட வடிவில் காண்கிறார். இவ்விரண்டு பாடல்களும் சித்தர்களின் கருத்தொற்றுமையைக் காட்டுகிறது.

இவ்வாறு முப்பொருள்கள், ஒருபொருளான இறைவனைப் பற்றிய செய்திகளைப் பாடல்கள் மூலமாகத் தந்தருளிய சிவவாக்கியர் ஆரவாரத்தோடு, இறைவனை உணராத நிலையில், வழிபடுவது பொருத்தமற்றது என்பதை வலியுறுத்தி, தூயமனத்தோடு அன்பு நிலையில் வழிபட்டாலே இறைவனின் திருவருள் கிடைக்கும் என்பதைக் கீழ்வரும் பாடலால் வலியுறுத்துகிறார்.

நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்தியே
சுற்றிவந்து மொணமொணென்று சொல்லுமந்திர மேதடா

நட்டகல்லும் பேசுமோ நாதனுள் ளிருக்கையில்
சுட்டசட்டி சட்டுவங் கறிச்சுவை யறியுமோ[32]

சிவவாக்கியர் பாடல்களில் புலப்படும் பதி குறித்த சைவசித்தாந்தக் கருத்துகளை இவ்வாறு அறிய முடிகிறது.

**பசுபற்றிய செய்திகள்**

முப்பொருள்களில் இரண்டாவதாகப் பேசப்படுவது பசு என்ற உயிராகிய பொருளாகும். பதியாகிய இறைவனுக்குரிய தன்மைகளைப்போல, பசுவாகிய ஆன்மாவும் அநாதியானது என்பதைச் சிவவாக்கியர் தெளிவாகக் குறிப்பிடுகிறார். ஆனால், நேரடியாகக் குறிப்பிடாமல் வினாவின் மூலமாகத் தெரியவைக்கிறார்.

ஆத்துமா வனாதியோ வாத்துமா வனாதியோ
மீத்திருந்த ஐம்பொறி புலன்களு மனாதியோ
தாக்கமிக்க நூல்களுஞ் சதாசிவ மனாதியோ
வீக்கவந்த யோகிகாள் விரைந்துரைக்க வேணுமே[33]

இப்பகுதியில் உயிரும் உயிருக்குரிய ஐம்பொறிகளும் அதாவது பாசமும் (ஆணவம்+கன்மம்+ மாயை= பாசம்) தத்துவங்களாகிய நூல்களும் இறைவனும் அநாதியோ என்று யோகிகளைப் பாடுவதுபோல பாடல் அமைந்திருக்கிறது. கேள்வியாக இருந்தாலும் அதற்குரிய விடையான, மூன்றுமே அநாதிதான் என்பது சொல்லாமலேயே விளங்குகிறது. அநாதியான உயிர் ஒன்றல்ல, எண்ணற்றவையாகும் என்பதையும் இவற்றில் எண்ணிக்கை கூற முடியாது என்பதையும் சிவவாக்கியர் தெளிவாகக் குறிப்பிடுகிறார். அதிலும், வாழ்ந்து மறைந்துபோன உடல்களைக் கொண்ட உயிர்கள் எண்ணற்ற கோடி என்றும் குறிப்பிடுகிறார்.

வாடிவாடி வாடிவாடி மாண்டுபோன மாந்தர்காள்
கோடிகோடி கோடிகோடி எண்ணிறந்த கோடியே[34]

இக்கருத்தினைச் சாத்திர நூல்களும் வலியுறுத்துகின்றன.

பிறந்தநாள் மேலும் பிறக்குநாள் போலும்
துறந்தோர் துறப்போர் பகை[35]

என்று திருவருட்பயன் துறந்தார் பெருமையைக் குறிக்கிறது.

இதனையே திருவள்ளுவரும்,

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக் கொண்டற்று[36]

என்று குறிப்பிடுகின்றார். திருவள்ளுவரும் சிவவாக்கியரும் இறந்தவர்களின் எண்ணிக்கையைக் குறிப்பிடுவதன் நோக்கம், வாழுகிற உலக மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் உயிர்களின் எண்ணிக்கையைக் குறிப்பிட்டாலும், உடல் இழந்த உயிர்களின் எண்ணிக்கை கணக்கற்றவை என்பதைக் குறிப்பதற்காக இருக்கலாம். இத்தகைய எண்ணற்ற உயிர்கள் உடம்போடு கூடி வாழ்ந்து உடம்பு அழியவேண்டிய காலத்தில் உயிர் பிரிகின்றது. ஆனால், உயிர் அழிவதில்லை என்பதைச் சிவவாக்கியர் அழுத்தமாகக் குறிப்பிடுகிறார்.

உடம்புயி ரிறந்தபோ துயிரிறப்ப தில்லையே
உடம்புமெய் மறந்துகண் டுணர்ந்துஞான மோதுமே[37]

இப்பகுதியில் உடம்பு, உயிர் இரண்டும் அழிவதுபோல் இருந்தாலும் உயிர் இறக்காது; என்றைக்கும் அழியாத நிலைத்த பொருளாய் இருக்கும் என்பதைக் கூறுவதோடு, உடம்பை விட்டுவிட்டு உயிரானது இறைவனைச் சேர்வதற்கு ஞானத்தைப் பெறவேண்டும் என்று சிவவாக்கியர் குறிப்பிடுவது, உயிரின் சிறப்பை உணர்த்துவதாகும். சிவப்பிரகாசம் உயிர்கள் பல என்று குறிப்பதோடு, அவ்வுயிர் என்றும் உள்ளதாகவும் காட்டுகிறது. அது இருவினைகளுக்கு ஏற்ப உடம்பினைப் பெறுகிறது என்றும், இறைவன் அருளால் மலங்களை அகற்றி

அவன் திருவருளை அடையும் என்றும் ஆன்மாவின் இலக்கணத்தைத் தொகுத்துக் கூறுகிறது.

உயிர், உடம்பு எடுப்பதற்கு முன்னால் ஆணவத்தோடு மட்டும் பொருந்தியிருக்கும் நிலையை, சைவசித்தாந்தம் 'கேவலநிலை' என்று குறிப்பிடும். அந்த நிலையில் உயிருக்கு ஆண்,பெண் பேதம் கிடையாது. இதனை, சிவவாக்கியர் குறிப்பிடும்பொழுது,

அண்ணலே யனாதியே யனாதிமுன் னனாதியே
பெண்ணு மானு மொன்றலோ பிறப்பதற்கு முன்னெலாம்[38]

என்று பாடலில் குறிப்பிடுகிறார்.

இதனைச் சிவப்பிரகாசம், எண்ண முடியாத உயிர்கள் பெறுகின்ற நிலைகள் மூன்று எனக்காட்டுகிறது. அவற்றை 'அவத்தைகள்' என்று கூறுகிறது. அவையே, கேவலம், சகலம், சுத்தம் எனப்படும். அவற்றில், கேவலம் என்பது, பாசத்திற்குரிய தத்துவங்களும் உடம்புகளும் இல்லாது, ஆணவமலம் ஒன்றையே கொண்டிருப்பது. அந்நிலையில் எப்பிரிவும் இல்லை என்று சுட்டுகிறது.

இத்தகைய உயிர்களில், இறைவன் உயிரை விட்டுப் பிரிக்க முடியாத அளவுக்கு இரண்டற்ற நிலை(அத்துவிதம்)யில் கலந்திருக்கிறான் என்பதைச் சிவவாக்கியர் விளக்குகின்றார்.

மின்னகத்தில் மின்னொடுங்கி மின்னதான வாறுபோல்
என்னகத்து ளீசனும் யானுமல்ல தில்லையே[39]

ஆவது மழிவது மில்லையில்லை யில்லையே[40]

இப்பகுதிகளால் இறைவன் உயிரோடு கலந்திருக்கிறான் என்பது தெளிவாகிறது. இதையே, சிவஞானபோதத்தில் முதல் அதிகிரணத்தில் மெய்கண்டார் குறிப்பிடுகின்றார். அப்பகுதியில் இறைவன் உயிர்களோடு

உடலாய் இருப்பதற்கு, பண்ணும், இசையும், பழமும், அறுஞ்சுவையும் போல் உயிர்களிடத்தில் வேற்றுமையின்றிக் கலந்திருக்கிறான் என்று குறிக்கப்பெற்றிருக்கிறது. அதற்குரிய பாடல்,

பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்
எண்ணும் சுவையும்போல் எங்குமாம் அண்ணல்தான்
அத்துவிதம் ஆதல் அருமறைகள் ஒன்றென்று
அத்துவிதம் என்றறையும் ஆங்கு[41]

என்று குறிப்பிடும்.

சைவசித்தாந்தத்தில் இறைவன், முற்றிலும் உணர்ந்தவன் என்றும், ஆன்மாக்கள், உணர்த்த உணர்கின்ற சிற்றறிவினை உடையது என்றும் கூறப் பெற்றிருக்கிறது. இதனையே, சிவவாக்கியரும் தனக்குள் இருக்கும் இறைவன் தன்னால் அறியப்படுவதில்லை. ‘அவன் அருளால்தான் அவனை அறிந்து செயலாற்றுகிறேன்’ என்றும், ‘அவன் தன்னுளே இருந்து உணர்த்த, தான் அறிவதாகவும் தாமே எதையும் அறியாத’தாகவும் குறிப்பிடுகிறார்.

என்னிலே இருந்ததொன்றை யானறிந்த தில்லையே
என்னிலே இருந்ததொன்றை யானறிந்து கொண்டபின்
என்னிலே இருந்ததொன்றை யாவர்காண வல்லிரேல்
என்னிலே இருந்துணர்ந்து யானுணர்ந்து கொண்டனே[42]

இதனை, சாத்திர நூல்களில் ஒன்றான சிவப்பிரகாசம்,

ஒருவிணர் விலாமை யானும்
ஓரொரு புலக்கண் ஆக
மருவிநின்று அறித லானும்
மனாதிகள் தம்மின மன்னித்
தருபயன் காந்த லானும்

உயிர்தர மாத லானும்

அருவினை யுடலுள் ஆகி

அறிவினால் அறியு மன்றே[43]

என்று குறிப்பிடுகிறது.

இப்பாடலின்படி, உடம்பு ஜடப்பொருளாய் இருப்பதால் அது எதனையும் அறியாது. ஐம்புலன்கள் எதையும் அறியும் என்றால் அதுவும் ஏலாது. ஏனென்றால் ஒவ்வொரு புலன்களும் ஒவ்வொன்றை அறியுமே தவிர, தனி ஒரு புலன் எல்லாவற்றையும் அறியாது. மனம் முதலிய அந்தக்கரணங்கள் பொருள்களை அறிய முயன்றாலும் அவை நேரே அறியாது, புலன்களை இயக்கித்தான் அறியும். எனவே, உடம்புக்குள்ளிருக்கும் உயிர், இறைவன் உணர்த்தும் அறிவினால்தான் அறியும் என்று கூறுகிறது. இதனை, சுருக்கமாகச் சிவவாக்கியர் ‘தன்னுள்ளே இருந்து உணர்த்த, தானும் உணர்ந்து கொண்டேன்’ என்றார்.

மேலும், அடுத்த பாடலில்,

நினைப்பதொன்று கண்டிலேன் நீயலாது வேறிலை

நினைப்புமாய் மறப்புமாய் நின்றமாயை மாயையோ

அனைத்துமாய் அகண்டமாய் அனாதிமுன் அனாதியாய்

எனக்குள்நீ உனக்குள் நான் இருக்குமாற தெங்ஙனே[44]

‘இறைவன் நினைப்புமாய், மறப்புமாய், மறைப்புமாய் நிற்பவன் என்றும், அவனைத் தான் தனியே நினைக்க முடியாது என்றும், அவன் நினைவால் எல்லாவற்றையும் அறிய, தனக்குள் அவனும் அவனுக்குள் தானுமாக இருக்கிறோம்’ என்றும் கூறுகிறார். இதனையேதான், திருவாசகம் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றது.

தந்தது உன்தன்னை கொண்டது என்தன்னை

சங்கரா யார்கொலோ சதுரர்[45]

சைவசித்தாந்தம் ஆன்மாக்களை மூன்று வகையாகப் பிரிக்கின்றன. ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலங்களும் உடைய உயிர்கள் சகலர் என்றும், ஆணவம், கன்மம் என்னும் இரண்டு மட்டுமே உடைய உயிர்கள் பிரளயாகலர் என்றும், ஆணவம் ஒன்று மட்டுமே உடைய உயிர்கள் விஞ்ஞானகலர் என்றும் முந்நிலைகளை அடைவன.

மலங்களில் கன்மமலம் ஒன்றாகும். கன்மம் என்ற சொல்லுக்குத் தமிழில், வினை அல்லது தொழில் என்று பெயர். இறைவன் உயிருக்கு உணர்த்துவது உலகப்பொருள்களின் அனுபவங்களோ நூலறிவோ அன்று. அவன் ஞானத்தை உணர்த்துவான் என்பது சைவ சித்தாந்த முடிவாகும். ஞானம் என்பது மெய்யறிவு எனப்படும். மெய்யறிவு என்பது பொருள்களில் நிலையானவற்றையும் நிலையில்லாதவற்றையும் உணர்த்துவதாகும். ஆன்மீக உலகில் நிலையுடையது என்பது இதுவரை குறிப்பிட்டு வருகிற முப்பொருள்கள்தாம். மற்ற உடம்பு முதலான போகப் பொருகள் தனு, கரண, புவன போகங்கள் அனைத்தும் நிலையில்லாதனவாகும். இவற்றை, ஆன்மாக்களுக்கு ஒரேமாதிரியாக உணர்த்துவதில்லை.

ஆணவம், கன்மம், மாயை மூன்றும் இருக்கக்கூடிய ஆன்மாக்கள் சகலர் எனப்படுவர். இம்மூவரில் விஞ்ஞானகலர் எனப்படும் ஆன்மாக்களுக்கு உள்ளத்திற்குள் எழுந்தருளி இறைவன் ஞானத்தை உணர்த்துவான். பிரளயாகலருக்கு கடவுள் வடிவத்தில் காட்சி தந்து ஞானத்தை உணர்த்துவார். சகலருக்கு ஆச்சாரியராகிய குருவடிவில் வந்து ஞானத்தை உணர்த்துவார். குருவடிவாய் வந்து ஞானத்தை உணர்த்துதலை சிவவாக்கியர் பல இடங்களில் குறிப்பிடுகிறார்.

ஆடுகாட்டி வேங்கையை யகப்படுத்து மாறுபோல்
மாடுகாட்டி என்னைநீ மதிமயக்க லாகுமோ
கோடுகாட்டி யானையைக் கொன்றுரித்த கொற்றவா
வீடுகாட்டி யென்னைநீ வெளிப்படுத்த வேணுமே[46]

இப்பகுதியில் வீடுகாட்டி என்னை வெளிப்படுத்துவது என்பது, பிறப்பு, இறப்பு அற்ற வீடுபேறு ஆகிய ஞானத்தை அறிவுறுத்தலாகும்.

கருவிருந்து வாசலாற் கலங்குகின்ற வூமைகாள்
குருவிருந்து சொன்னவார்த்தை குறித்துநோக்க வல்லிரேல்
உருவிலங்கு மேனியாகி யும்பராகி நின்றநீர்
திருவிலங்கு மேனியாகச் சென்றுகூட லாகுமே[47]

பிறப்பினுடைய துன்பத்தைக் கூறி, அதிலிருந்து நீங்குவதற்கு இறைவன் குருவாக இருந்து கூறுகிற ஞானவார்த்தையை உயிர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதைச் சாத்திர நூல்கள் தெளிவாகக் காட்டுகின்றன. சிவஞானபோதம் எட்டாம் சூத்திரத்திலும், சிவஞான சித்தியார் சுபக்கத்திலும் இதை விரிவாகக் காணமுடிகிறது.

சிவப்பிரகாசம் என்ற சாத்திரநூல், ஞானம் கிடைப்பதைக் குறிப்பிடுகின்றபொழுது, படிநிலைப்படி காட்டுகிறது. அதாவது, பொருள்களை உணர்த்தும் அறிகருவிகளாகிய மனம்முதலிய அந்தக்கரணங்கள் (மனம், சித்தம், புத்தி, அகங்காரம்) இல்லையென்றால் அறியமுடியாது. ஆனால், அதேநேரத்தில் அந்தக் கருவிகளால் ஞானத்தை நேரடியாகப் பெறவும் முடியாது. முற்பிறவிகளில் செய்த சரியை, கிரியை, யோகங்களின் பயனால் இறைவன் மானுட உருவங்களைக் கொண்டு ஆசிரியனாக (குரு) எழுந்தருளி உலக போகங்களை நீக்கி இறையருளுக்கிணையான ஞானத்தை உயிர்களுக்கு அருள்செய்வான் என்பது அப்பாடல் குறிப்பிடும் கருத்து. அப்பாடல் பின்வருமாறு,

காட்டிடும் காரணம் ஒன்றும்
  இல்லையேல் காணொ ணாதாம்
நாட்டிய இவற்றால் ஞானம்
  நணுகவும் ஒண்ணா முன்னம்

ஈட்டிய தவத்தி னாலே

இறையருள் உருவாய் வந்து

கூட்டிடும் இவற்றை நீக்கி

குறைகழல் குறுகு மாறே[48]

இப்பாடல் சிவவாக்கியரின் செய்தியை விரிவாகத் தருகிறது. இதைப் போலவே திருவருட்பயனும் இறைவன் ஞானாசிரியனாக வந்து அருளவில்லை என்றால், எந்த ஆன்மாவும் ஞானத்தைப் பெறமுடியாது என்பதை விதியாகவே குறிப்பிடுகின்றது.

அகத்துறு நோய்க்குள்ளின ரன்றி அதனைச்

சகத்தவரும் காண்பரே தாம்[49]

இப்பகுதிகள் மூலம் ஆன்மா கடைத்தேற ஆச்சரியரின் ஞானதீட்சை தவறாது கிடைத்திட வேண்டும் என்பது பெறப்படுகிறது.

சிவவாக்கியர் குருவினால்தான் ஞானம் கிடைக்கும் என்பதில் அழுத்தமான எண்ணம் கொண்டவர் ஆவார். என்னதான் இறைவன் தனக்குள் இருந்தாலும் குருவடிவில் எழுந்தருளித்தான் ஞானத்தைத் தரமுடியும் என்பதைத் தெளிவாகச் சுட்டிக் காட்டுகிறார்.

அருவமா யிருந்தபோ தன்னையங் கறிந்ததில்லை

உருவமா யிருந்தபோ துன்னைநா னறிந்தனன்

குருவினால் தெளிந்துகொண்டு கோதிலாத ஞானமாம்

பருவமான போதலா பரப்பிரம்ம மானதே[50]

அருவுருவத்தில் (உருவமற்ற நிலை) இறைவனைக் காணமுடியவில்லை. தனக்குள் உயிரில் கலந்த உருவமாய் இருந்த பொழுதும் இறைவனை அறியமுடியவில்லை. இறைவன் குருவடிவத்தில் எழுந்தருளிக் குற்றமில்லாத ஞான உபதேசத்தினைப் போதித்ததால் உயர்ந்த இறைவனை அறிய

முடிந்தது என்று பொருள் அமையும்படி பாடியிருக்கிறார். சாத்திரநூல்களும் இறைவன் உறுதியாகக் குருவாக வருவார், அவர் திருவார்த்தையால்தான் ஞானம் பெறமுடியும் என்பதைத் தெளிவாக உணர்த்துகின்றன. சான்றாகத் திருவுந்தியார்,

சிந்தையின் உள்ளும் என் சென்னியினும் கோ
வந்தவர் வாழ்க என்று உந்தீபற
மடவாழ் உடனே என்று உந்தீபற[51]

என்று குறிப்பிடுகின்றது.

திருவுந்தியாரின் ஆசிரியர் திருவியலூர் உய்யவந்த தேவனார் இறைவனது திருவடித் தாமரையானது தன்னுடைய சிந்தையிலும் தன்னுடைய தலையிடத்திலும் சேரும்படியாக ஞானாசிரியர் வடிவில் வந்த சிவபெருமானை வாழ்த்துகிறார். எனவே, உயிரில் கலந்திருக்கும் இறைவன்தான் ஞானாசிரியன் வடிவில் எழுந்தருளி ஞானோபதேசம் செய்வார் என்பது புலனாகின்றது. இந்த அளவிற்கு ஞானாசிரியர்களை சாத்திர நூல்களும், சிவவாக்கியர் உள்ளிட்ட சித்தர்களும் பெருமைப்படுத்துவதற்குக் காரணம், தங்கள் மானுட வாழ்க்கையை ஞானநிலைக்கு உயர்த்திக் கொண்டதேயாகும்.

அதாவது தாங்களே ஞானாசிரியர்களாக விளங்கிய காரணத்தினால் ஞானநிலையை அவர்களால் உணர முடிந்தது. இதனை மெய்ப்பிக்கும் வண்ணம் திருமூலராம் சித்தரின் வாழ்க்கை அமைகிறது. அந்த ஞான வாழ்க்கையைப் பெற்றதால் திருமூலரின் ஞானவாக்கும் பாடலாக வெளிவருகிறது.

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவின் திருவுருச் சிந்தித்தல்தானே[52]

இறைவனின் திருவருளை ஞானாசிரியர் வடிவத்தில் மானுடவடிவில் வாழும் ஆன்மா பெற்றுவிட்டால் அந்த மானுட வாழ்வை சீவன்முத்தர் வாழ்க்கையாகச் சைவசித்தாந்தம் குறிப்பிடுகிறது. இச்சீவன்முத்தர் வாழ்க்கையில் இன்பதுன்பங்கள் நிகழ்ந்தாலும், சீவன்முத்தரை (சாராது) பந்திக்காது. சிவஞானபோதம் உள்ளிட்ட சாத்திர நூல்கள், இறுதிப் பகுதியில், சீவன் முத்தர் பற்றிய செய்திகளைக் குறிப்பிடுகின்றன. சிவவாக்கியரும், சீவன் முத்தர்களுக்கு உலகப்பற்று இல்லை என்பதையும், இன்ப துன்பங்களுக்கு அவர்கள் ஆட்பட மாட்டார்கள் என்பதையும் தெளிவாக உணர்த்துகிறார்.

உறங்கிலென் விழிக்கிலென் னுணர்வுசென் றொடுங்கிலென்
சிந்தைவைம் புலன்களுந் திசைதிசைக ளொன்றிலென்
புறம்புமுள்ளு மெங்கணும் பொருந்திருந்த தேகமாய்
நிறைந்திருந்த ஞானிகாள் நினைப்பதேது மில்லையே[53]

அதேபோலச் சிவஞானபோதத்தில்,

புண்ணிய பாவம் பொருந்தும் கான்மியமும்
மான்முதல் மாயைகாண் மாயையும் கண்ணிய
அஞ்ஞானம் காட்டும்இவ் வானமும் இம்மூன்றும்
மெஞ்ஞானிக்கு ஆகா விடு[54]

என்றும், சிவப்பிரகாசத்திலோ

தீங்குறு மாயைசேரா வகைவினை திரிவி தத்தால்
நீங்கிட நீங்கா மூல நிறையிருள் இரிய நேயத்து
ஓங்குணர் அகத்து அடங்கி உளத்துளின் யொடுங்கநேரே
தூங்குவர் தாங்கி ஏகத் தொன்மையில் துகளிலோரே[55]

என்பன சீவன் முத்தருக்கு இவ்வுலக வாழ்வில் இன்பதுன்ப தொடர்கள் இல்லை என்பதை விளக்குவதோடு, அவற்றை இறைவன் தன் கருணையாக ஏற்றுக் கொள்வான் என்பதையும் உணர்த்துகின்றன.

உயிர்கள் மீண்டும் மீண்டும் பிறந்து இறப்பதற்கும் உலகின் நடைமுறைக்கும் இன்றியமையாத காரணப் பொருளாய் இருப்பது கன்மமே ஆகும். ஆச்சாரியனால் ஞானம் பெற்றுவிட்டால் இந்த உடம்பு எடுத்த கன்மவினையை முடியும்வரை ஆன்மா வாழ்ந்து, பிறகு பிறப்பில்லாத நிலையில் இறைவனைச் சென்று சேரும் என்பது சித்தாந்த முடிவாகும். இதனைச் சிவவாக்கியர்,

நல்லவாசலைத் திறந்து ஞானவாச லூடுபோய்
எல்லைவாசல் கண்டவ ரினிப்பிறப்ப தில்லையே56

என்று குறிப்பிடுகிறார். நல்ல மனதாகிய வாசலைத் திறந்து ஆச்சாரியர் கூறிய ஞானவாசலின்வழியே இறைவனின் திருவடிகளை அடைந்தவருக்குப் பிறப்பு இல்லை என்பது சிவவாக்கியர் தரும் தத்துவ நிலையாகும்.

திருவருட்பயன், சீவன்முத்தர்கள் தங்கள் உலக வாழ்வில் வாழுகின்ற பொழுதே ஞானம் எய்தி பிறப்பற்ற முத்திநிலை அடைவார்கள் என்றும் அவர்களுக்கு எவ்வித வினையும் இல்லை என்றும் குறிப்பிட்டு சிவவாக்கியரின் கருத்துக்கு வலிமையூட்டுகிறது.

மும்மை தருவினைகள் மூளாதாம் மூதறிவார்க்கு
அம்மையும் இம்மையும் ஆம்[57]

என்று குறிப்பிட்டு பிறப்பற்ற நிலையை உணர்த்துகிறார். இவ்வாறு முப்பொருளில் ஒன்றான தத்துவங்களை சிவவாக்கியர் முறைப்படி சொல்லிச் செல்கிறார். அவருடைய கருத்துகளுக்கு, சாத்திரங்களும் திருமுறைகளும் வலிமை சேர்க்கின்றன என்பதை இதன்மூலம் உணர முடிகின்றது.

**சக்தியும் சிவனும்**

இன்றைய தமிழகத்தில் பெண் தெய்வமாம் சக்தி வழிபாடு முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. ஆன்மீக வரலாற்றின் தொடக்கத்தில் அன்னை உமையவளைத் தனித்து வணங்குவதில்லை. இறைவனை மாதொருபாகனாகக்

கொண்டு அர்த்தநாரீஸ்வரர் வடிவத்தில் தமிழர்கள் போற்றினார்கள். எனவேதான், ஏழாம் நூற்றாண்டுக்கு உட்பட்ட காலத்திற்குள் கிடைத்த தேவார, திருமுறைகளிலும் எட்டாம் திருமுறைகளிலும், திருவாசகத்திலும் அருளாளர்கள் சிவனை நினைந்தே பாடினார்களே தவிர, உமையவளாம் பெண் தெய்வ வழிபாட்டை அவர்கள் குறிப்பிடவில்லை. இன்னும் குறிப்பிட்டுச் சொன்னால், பத்தாம் நூற்றாண்டிற்கு முன் எழுப்பப்பட்ட திருக்கோயில்களில், பெண்தெய்வக் கருவறை இல்லை என்பதை இங்கு குறிப்பிடலாம்.

பத்தாம் நூற்றாண்டிலும் அதற்குப் பின்னரும் தோற்றுவிக்கப்பட்ட சைவத் திருக்கோயில்களில் இறைவனின் பின்னே அல்லது முன்னே தனிக்கருவறையில் சக்திக்கு இடம் கொடுக்கப்பட்டது. பின்னர் பதினைந்தாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட கோயில்களில் இறைவனின் கருவறைக்குப் பக்கத்திலேயே அர்த்த மண்டபத்தில் தனியே கருவறை வைக்கப்பட்டது. இவற்றையெல்லாம் நோக்கும்பொழுது தொடக்ககாலத்தில் இறைவனோடு இரண்டறக் கலந்திருந்த சக்திவழிபாடு, காலப்போக்கில் வளர்ந்து, தனிவழிபாட்டிற்குரியதாகிப் பின்னர் சிவன்கோயிற்கப்பாற்பட்ட தனிக் கோயிலாக வணங்கும் வண்ணம் பரிணமித்துள்ளது.

சைவ சித்தாந்தத்தில் சக்தி என்று குறிக்கப் பெறுவதில்லை. சத்தி என்றுதான் சாத்திரங்கள் வழங்குகின்றன.[58] அந்தச் சத்தியும் இறைவனிடமிருந்து பிரிக்க முடியாதது என்பது சித்தாந்தக் கொள்கை. இதனைத் திருவருட்பயன் குறிப்பிடுகின்றபொழுது,

தன்னிலைமை மன்னுயிர்கள் சாடித் தரும்சத்தி
பின்னமிலான் எங்கள் பிரான்[59]

என்று குறிப்பிடும். இதனை அடியொற்றி,

விருத்தரும் பாலராவர் மேனியுஞ் சிவந்திடும்
அருட்டரித்த நாதர்பாத மம்மைபாத முண்மையே[60]

என்பது சிவவாக்கியரின் பாடற் பகுதியாகும். இதில் இறைவனின் பாதமும் இறைவியின் பாதமும் ஒருசேரக் குறிக்கப் பெற்று, பிரிதலில்லாத் தன்மை உணர்த்தப் பெறுகிறது.

இச்சத்தியின் தன்மையைச் சிவஞானசித்தியார் குறிப்பிடும்பொழுது சிவசக்தியின் வடிவம் யாது என்று கேட்டால், அது தடையில்லா சுத்த ஞானம் ஆகும் என்று குறிப்பிட்டு, படைப்பு முதலிய தொழில்கலெல்லாம் சுத்தஞானமாகிய பராசக்தியினால் காரியப்படுத்தப்படுகின்றது என்று குறிப்பிடும்.[61]

எனவே, சைவசித்தாந்த அடிப்படையில் சத்தி தனியொரு தெய்வமாகப் பிரிக்கப்படாமல் இறைவனின் அருள் வடிவாக இறைவனின் ஐந்து தொழில்களைச் செய்கின்ற சத்தியாக விளங்குகிறது.

இதனை உள்வாங்கியே,

சத்தியுஞ் சிவனுமாக நின்றதன்மை யோர்கிலீர்
சத்தியாவ தும்முடல் தயங்குவசீவ னுட்சிவம்
பித்தர்கா ளறிந்திலீர் பிரானிருந்த கோலமே[62]

என்று சிவவாக்கியரும், இறைவனிடத்திலிருந்து சத்தி பிரிக்க முடியாதது என்பதையும், சத்தி ஞானம் தரும் அருளாகவும் விளக்குகிறாள் என்பதையும் தம் பாடல்வழி எடுத்துக் காட்டுகிறார்.

இதனை மாணிக்கவாசகரும்,

உடையாள் உன்றன் நடுவிருக்கும்[63]

என்று இறை சத்தி உடனாயிருப்பதைப் போற்றி மகிழ்வார். எனவே, இச்செய்திகளிலிருந்து, ஆன்மாக்களுக்கு ஞானம் வழங்குவதற்குச் சத்தி செயல்படும் கருவியாக விளங்குகிறது என்பதை உணரலாம்.

## வினைக்கொள்கைகள்

இந்தியத் தத்துவ ஞானத்தில், வினைக்கொள்கை, சிறப்பிடம் பெறுவதாகும். இந்தியாவில் நிலவும் பெரும்பாலான சமயங்கள் வினைக் கொள்கைகளை ஏற்றுக் கொள்கின்றன. அதில் சமணமும் சைவமும் வைணவமும் வினைக்கொள்கைகளை முழுமையாக ஏற்கின்றன. சைவ சித்தாந்தம் பாசத்திற்குரிய ஆணவம், கன்மம், மாயை ஆகிய முப்பொருள்களையும் அவற்றுள் ஒன்றான கன்மவினை பற்றியும் விரிவாக உணர்த்துகிறது. வினையை சஞ்சிதவினை (ஊழ்வினை) என்றும், பிரார்த்தவினை ( நிகழ்வினை) என்றும், ஆகாமியவினை (எதிர்காலவினை) என்றும் பகுத்துக் காட்டுகிறது. அந்தமுறையில் சிவவாக்கியரும் வினைக்கொள்கைகளை ஆங்காங்கு உரைத்துச் செல்கிறார். பெரும்பாலும் அவர் பண்டை வினையாம் ஊழ்வினையை மிகுதியாகக் குறிப்பிடுகிறார்.

கருவினிற் கருவதா யெடுத்தவேழு தோற்றமும்
மிருவினைப் பயத்தினால் பிறந்திறந் துழன்றிடும்
மறுவினைப் பிறவிமூன்று காலமும் வகுத்தபின்
உருவினைப் பயனிதென் றுணர்ந்தஞானி சொல்லுமே[64]

இப்பாடல் மூலம் கருவிலிருந்து பிறக்கக்கூடிய எழுவகைப் பிறப்பும் வினைகளின் பயன்களால் (நல்வினை, தீவினை) நிகழ்கின்றன என்றும், ஆகாமிய வினை மூன்று காலத்திற்கும் உரியது என்றும், பிரார்த்த வினையால் உடம்பு தோன்றுகிறது என்றும் சிவவாக்கியர் குறிப்பிடுவது நினைவுகூரத் தக்கதாகும்.

இதனையே சிவஞானபோதம் இரண்டாம் சூத்திரம்,

உள்ளதே தோற்ற உயரனையும் அவ்வுடலில்
உள்ளதாம் முன்செய்வினை உள்ளடைவே - வள்ளலவன்

செய்பவர் செய்திற் பயன்விளைக்கும் செய்யேபோல்

செய்வன் செயலனையச் சென்று[65]

என்று குறிப்பிடுகிறது. இப்பாடலின் பொருள், முற்பிறவியில் செய்த புண்ணிய பாவமாகிய சஞ்சித வினையே உடம்பினைத் தோற்றுவிக்க, அவ்வுடம்பில் உயிரானது பொருந்தி, அவற்றின் பயனாகிய இன்ப துன்பங்களைப் பிரார்த்த வினையாக அனுபவிக்கும். முன்செய்த வினையை அனுபவிக்கும்பொழுது ஏற்படுகின்ற விருப்பு வெறுப்புகள், உயிருக்கு மறுபிறவியாகிய ஆகாமிய வினையை உண்டாக்கும். உழவுத் தொழிலின் பயனை விளைநிலம் தருவதுபோல, வினையின் பயன்களை இறைவன் உயிர்களுக்கு ஊட்டுவான். வினைதானே வந்து பொருந்தாது. எனவே, வினைகளின் அடிப்படையில் உயிர்களின் வாழ்வியல் அமைகிறது என்பது பெறப்படுகிறது.

பிறிதோரிடத்தில் இந்தப் பழைய வினையைக் குறிப்பிடுகிறபொழுது வல்வினை என்று குறிப்பிடுவர். செய்த வல்வினை என்றும் பண்டுகொண்ட வல்வினை என்றும் இடம்பெற்றிருப்பதை இங்கு சுட்டலாம். இந்தக் கன்மத்தால் ஏற்படுகிற வினைகள் ஆச்சார்யனுடைய திருக்கண் பார்வையில் அழிந்திடும் என்பதைச் சிவவாக்கியர் கீழ்வரும் பகுதிகளால் விளக்குகிறார்.

கருவிலே விழுந்தெழுந்த கன்மவா தனையெலாம்

பருதிமுன் னிருளுதாம் பறியுமங்கு பாருமே[66]

கன்ம வாதனையை அனுபவிக்கத் தோன்றுகின்ற உடம்பும், உலகமும் மாயையின் தோற்றமாகும் என்று சிவவாக்கியர் குறிப்பிடுகிறார்.

மண்ணிலாம் பிறப்பறுத்து மலரடிகள் வைத்தபின்

அண்ணலாகு மெம்முளே யமர்ந்துவாழ்வ துண்மையே[67]

இப்பகுதியில் மாயையினால் மண் முதலான ஐம்பூதங்கள் தோன்றுகின்றன என்பதையும் மயக்கம் தருகின்ற உடல்கள் தோன்றுகின்றன என்பதையும் குறிப்பாகக் காட்டிச் செல்கிறார்.

பாசத்தில் முதன்மை பெறுகிற ஆணவமலம் சைவசித்தாந்தத்தில் விளக்கம் பெறுகிற ஒன்றாகும். இயற்கையில் விரிவுடையதாகிய உயிரின் அறிவை மிகச்சுருங்கியதாச் செய்து ஆணவமலம் என்று அறியப்படும். ஆகவே, அணுக்கள் என்று பெயர்பெறும் வகையில் ஆன்மாக்கள் மிகச் சிறியனவாய் நிற்றல் ஆணவத்தின் சேர்க்கையால் என்பது விளங்கும்.[68]

ஆணவத்தைப் பற்றிச் சைவசித்தாந்தம் சொல்லும்பொழுது, ஆணவ மலமானது எண்ணற்ற உயிர்களுடன் கூடியிருந்தாலும் தான் தனித்து ஒன்றாய் விளங்குவதாகும். உயிர்கள் ஞானாசிரியரால் பக்குவமடைகின்றபொழுது உயிர்களை விட்டுத் தன் செயல்களை அடக்கிக்கொண்டிருக்கும்போது, பலவித நிலைகளில் அடங்கும். இருண்ட பேரிருளாய் விளங்கி, அஞ் ஞானத்தை விளைவிக்கும். செம்பில் பொருந்திய களிம்பைப் போல், உயிரோடு உடல் விளங்கி இறைவனை அடையும் மெய்யறிவை மறைக்கும்.

சித்தாந்தம் கூறும் இந்த ஆணவ மறைப்பைச் சிவவாக்கியர்,

காணவேண்டு மென்றுநீர் கடன்மலைக ளேறுவீர்
ஆணவம தல்லவோ வறிவில்லாத மாந்தரே
வேணு மென்றவ் வீசர்பாத மெய்யுளே தரிப்பிரேல்
றாணுவாக நின்றசீவன் றான்சிவன் றான்சிவம தாகுமே[69]

என்ற பாடல் மூலம் வெளிப்படுத்துகிறார். இதையே, திருஞானசம்பந்தரும் ‘ஆணவம் மறைப்பதால் இறைவனைக் காணக் கடல், மலை ஏறுகின்ற ஆன்மாக்களே இறைவனுடைய திருவடியை உயிருக்குள்ளே நினைந்து வணங்கினால் ஆணவமறைப்பை நீக்கி இறைவன் தன்னை அறியச் செய்வான்’ என்று குறிப்பிடுகின்றார். ஆணவத்தைக் குறைத்துக் கொள்ள வேண்டுமென்றால், ஆசையை நீக்க வேண்டும் என்பது சிவவாக்கியர் கண்ட நெறியாகும்.

அப்புடன் மலமறுத்து ஆசைநீக்க வல்லிரேல்

செப்புறாத ஓசையில் தெளிந்துகாண லாகுமே[70]

என்பது அவரது குறிப்புரையாகும்.

பாசத்தில் மாயையினால் உண்டாகிற பொருள்களைக் குறிப்பிடுகின்ற பொழுது, முப்பத்தாறு தத்துவங்களும் மறுமையைக் காரணமாகக் கொண்டு உண்டாகின்றன என்பது சைவசித்தாந்த மரபாகும். முப்பத்தாறு தத்துவங்களைப் பற்றிய குறிப்புகளை, குறிப்பாகச் சிவவாக்கியர் காட்டுகின்றார்.

'மூன்று முப்பத்தாறினொடு மூன்று மூன்று மாயமாம்' எனப்படும் மூவகைப்பட்ட உயிர்கள், (விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர்) முப்பத்தாறு தத்துவங்களோடு மூன்று உலகங்களோடு (விண், மண், பாதாளம்) திகழுகின்றன என்பது குறிப்பாகப் பெறப்படுகின்றது. முப்பத்தாறு தத்துவங்கள் என்பன,

| | |
|---|---|
| நிலம் நீர் தீ காற்று ஆகாயம் | 5 |
| மெய் வாய் கண் மூக்கு செவி | 5 |
| சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் | 5 |
| வாய் கால் கை எருவாய் கருவாய் | 5 |
| மனம் புத்தி சித்தம் அகங்காரம் | 4 |
| ஆக ஆன்மத் தத்துவங்கள் | 24 |

காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்ற 7ம் வித்தியா தத்துவங்கள். சிவம், சத்தி, சதாக்கியம், ஈஸ்வரம், சுத்தவித்தை இந்த 5ம் சுத்த தத்துவங்கள். ஆக, முப்பத்தாறு தத்துவங்கள் சைவ சித்தாந்த தத்துவத்தில் பேசப்படுவனவாகும்.[71]

இந்த முப்பத்தாறு என்ற எண்ணிக்கையைச் சிவவாக்கியர்,

மூன்றுபத்து மூன்றையும் மூன்றுசொன்ன மூடனே[72]

என்று குறிப்பிடுகிறார். இதன் விளக்கம் மூன்று பத்து என்பது முப்பதையும், மூன்று, மூன்று என்று கூறியது ஆறையும் சேர்த்து முப்பதாறு என்பதைக் குறிக்கிறது என்பதாகும்.

இவ்வாறு இறைவன் உயிர் வினைக் கோட்பாடு உள்ளிட்ட பாசம் ஆகிய முப்பொருளை சிவவாக்கியர் சைவ சித்தாந்த அடிப்படையில் தத்துவ விளக்கங்களைத் தருகிறார். இவை மட்டுமல்லாது வேறுசில குறிப்புகளையும் தனது அனுபவத் தத்துவங்களாகக் குறிப்பிடுவதும் தெரிய வருகிறது.

மின்னகத்தில் மின்னொடுங்கி மின்னதான வாறுபோல்
என்னகத்துள் ஈசனும் யானுமல்ல தில்லையே[73]

என்கிறார் சிவவாக்கியர்.

சிவவாக்கியர் தம் பாடல்களில் மேலும் பல செய்திகளைக் கீழ்க் கண்டவாறு உணர்த்துகின்றார்.

பொருள்களைப் பார்க்கின்ற கண், தன்னைப் பார்க்க வைக்கின்ற உயிரைக் காண முடியாதது போல, உயிரானது தன்னை இயக்குகிற இறைவனைக் காணாது கலங்குகிறது என்பதை,

கண்ணுள்நின்ற கண்ணில்நேர்மை கண்ணறிவி லாமையால்[74]

என்னும் பாடல்வழியிலும், செம்பிலே களிம்பு போல உயிரில் மலங்கள் கலந்து வருகின்றன என்பதை,

செம்பினில் களிம்புவந்த சீதரங்கள் போலவே[75]

என்னும் பாடலிலும், இறைவன் எல்லாவற்றையும் கடந்த துரியாதீத நிலையில் விளங்குகின்றவன் என்பதை,

துரியமும் கடந்திருந்த தூர தூரமே[76]

என்னும் பாடல்வழியிலும் இவ்வாறு சிவவாக்கியர் சுட்டிக் காட்டுகிறார்.

மானுடப் பிறவியில் உயர்வு காண நால்வகை மார்க்கங்களைச் கைக்கொள்ள வேண்டும். அவ்வாறு கைக்கொண்டால் அவ்வவற்றிற்குரிய முத்திப் பயன்களைப் பெறலாம் என்கிறார் சிவவாக்கியர். அதாவது, சரியை என்ற உடற்றொண்டை இறைவனுக்குச் செய்தால், சாலோகம் என்ற இறையனுபவத்தை அறியலாம். மந்திரங்களைக் கூறி, கிரியைப் பணி செய்தால் சாரூபம் என்ற இறையின் அருகில் செல்லும் பயனைப் பெறலாம். மனஒருமைப்பாடு என்ற யோகத்தைச் செய்தால் சாரூபம் என்ற இறைவடிவத்தைப் பெறலாம். ஞானம் என்ற நிலையை அடைந்தால் உயிர் இறைவனோடு இரண்டறக் கலக்கின்ற சாயுட்சியப் பயனைப் பெறலாம்.[77]

இறைவன் அருளால் ஞானத்தைப் பெறக் கலைகளை அறிவது, நூல்களைக் கற்பது, ஞானத்தைப் பெற முயல்வது ஆகியவை இறையருளைப் பெறுவதற்குரிய படிநிலைகளாம்.[78]

ஞான நூல்களைத் தேடிக் கற்றால் ஞானமாகிய சோதியை அறியலாம். சோதியாம் இறைவனை அறிந்தபின் ஞானநிலையிலேயே இருக்கலாம்.[79]

சித்தாகிய இறைவன் இல்லாமல் சீவன் இருப்பதில்லை. ஒன்று, வினையின் வயத்தால் அனுபவிக்க வேண்டிய இன்ப துன்பங்களில் உயிரில் இறைவன் கலந்திருப்பான். வினை தீர்ந்து ஞானம் பெற்றபின் தன்னுள் உயிரைச் சேர்த்துக் கொள்வான் என்று இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பை விளக்குகிறார்.[80]

எப்பொழுதும் இறைவனை நினைத்துக் கொண்டே இருந்தால் இறைவனது திருவருளை அடைய முடியும். அது எது போல என்றால் மண்கூட்டில் வேட்டுவனாம் குளவி கொண்டு வந்து வைத்த புழு, வேட்டுவத்தின் நினைவிற்கேற்ப உருவம் பெறுகிறதோ அதுபோல என்கிறார் சிவவாக்கியர்.[81]

இவ்வாறு, தன்பாடல்களில் சைவ சமயத்தின் அடிப்படைக் கொள்கைகளை அனுபவ அறிவால் அறிந்து கொண்ட சிவவாக்கியர் தமது பாடல்களில் தத்துவங்களைப் பொதிந்து வைத்துள்ளார்.

## தொகுப்புரை

சைவம் என்பது சிவம் என்னுஞ் செந்தமிழ்ச் சொல்லடியாய்ப் பிறந்து சிவனோடு தொடர்புடைமை என்னும் பொருளில் வழங்குவது. சிவனைப் பற்றிய நிலைமையையும் சைவநூல்களையும் சிவனடி சேர்தற்குரிய நெறியையும் இச்சொல் குறிக்கிறது.

சித்தாந்தம் என்பது சித்தம் + அந்தம் என்ற இரு சொற்களால் ஆகி, முடிந்த முடிபு என்று பொருள் பெறுகிறது.

சைவசமயத்தின் அடிப்படையாக விளங்கும் முப்பொருள் கொள்கைகள் பதி, பசு, பாசம் ஆகும். இக்கொள்கை பற்றி ஆராய்ந்து அவற்றின் பொதுச்சிறப்புகள் பற்றி 'இவைதாம்' என்று இலக்கணமாக வகுத்து, முடிந்த முடிபாகத் தருவதால் சைவ சமயக் கொள்கைகள், 'சைவ சித்தாந்தம்' என்று அழைக்கப் பெறுகிறது. சிவவாக்கியரின் பாடல்களின் உள்ளீடாக சைவ சித்தாந்த சாத்திர நுண்பொருள்கள் மறைந்து கிடக்கின்றன.

முப்பொருள்களில் முதன்மையான 'பதி'யாம் இறைவன், எவ்வாறு பயிர்களின் விளைக்கு விதை காரணமாக இருக்கிறதோ, அதுபோல எப்பொருளுக்கும் இறைவன் முதன்மையாக விளங்குகின்றான்.

முப்பொருள்களில் இரண்டாவதாகப் பேசப்படும் 'பசு' என்ற உயிராகிய ஆன்மாவும் இறைவனது இயல்பினைப் போன்றே அநாதியானது.

மூன்றாவதாகிய 'பாச'த்திற்குரிய ஆணவம், கன்மம், மாயை ஆகிய ஒவ்வொன்றும் விரிவாக விளக்கப்படுகிறது.

கன்ம வினைகளான சஞ்சித வினை (ஊழ்வினை), பிரார்த்த வினை, (நிகழ்வினை) ஆகாமிய வினை (எதிர்கால வினை) ஆகிய சைவ சித்தாந்த வினைக்கொள்கைகள் சிவவாக்கியர் பாடல்களிலிருந்து தெளிவாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. சத்தியும் சிவனும் பற்றிய தத்துவநிலைகள், சிவவாக்கியர் காட்டும் பாங்கில் வெளிக் கொணரப்பட்டுள்ளன.

சைவசித்தாந்த நெறியில் வீடுபேறு அடையச் சிவஞான சித்தியார் குறிப்பிடும் படிநிலைச் சாதனங்களான சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகியன சிவவாக்கியர் பாடல்களில் மிளிரும்வண்ணம் இக்காலச் சூழலிலும் கைக்கொள்ளும் நிலையில் அமைந்துள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. http://ta.wikipedia.org/wiki_சைவசித்தாந்தம்
2. சிவப்பிரியா முனைவர். திருமந்திரம் ஓர் எளிய அறிமுகம், ப.29
3. மேலது, ப.29
4. பாலசுப்பிரமணியம் சிற்பி முனைவர், சொ. சேதுபதி முனைவர், தமிழ் இலக்கிய வரலாறு, ப.665
5. சிவவாக்கியர், சிவவாக்கியர்பாடல்கள், பா. 462
6. மேலது, பா. 510
7. மேலது, பா. 298
8. அருணந்தி சிவாச்சாரியார், சிவஞானசித்தியார், பிராமணசூத்திரம், பா.21
9. திருமூலர், திருமந்திரம், முதல் தந்திரம், உபதேசப் பாடல் 159
10. உமாபதி சிவாச்சாரியார், திருவருட்பயன், ப.
11. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.57
12. உமாபதி சிவாச்சாரியார், திருவருட்பயன், பா.1
13. மேலது, ப.
14. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.501
15. மேலது பா. 200
16. திருமூலர், திருமந்திரம், 7ஆம் தந்திரம், பா.3
17. மாணிக்கவாசகர், திருவாசகம், சிவபுராணம், 5
18. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.4
19. அருணந்தி சிவாச்சாரியார், சிவஞானசித்தியார், பிராமணசூத்திரம்,2 பா.91
20. மெய்கண்ட தேவர், சிவஞானபோதம், 2ஆம் சூத்திரம், பா.1
21. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.9
22. மேலது, பா.422
23. திருநாவுக்கரசர், தேவாரம், 6ஆம்திருமுறை, கோயில்பதிகம், பா.1
24. மாணிக்கவாசகர், திருவாசகம், திருச்சதகம், அறிவுறுத்தல் பா.15
25. திருவள்ளுவர், திருக்குறள், 9
26. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.20
27. மேலது, பா.297

28. மேலது, பா.407
29. மேலது பா.33
30. மேலது, பா.35
31. திருமூலர், திருமந்திரம், பா.1792
32. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.520
33. மேலது, பா.75
34. மேலது, பா.4
35. உமாபதி சிவாச்சாரியார், திருவருட்பயன் பா.11
36. திருவள்ளுவர், திருக்குறள்-22
37. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.91
38. மேலது, பா.28
39. மேலது, பா.94
40. மேலது, பா.35
41. மெய்கண்டதேவர், சிவஞானபோதம், பிராமணவியல், சூத்திரம்-2, பா.4
42. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.7
43. உமாபதி சிவாச்சியார், சிவப்பிரகாசம், பா.53
44. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.8
45. மாணிக்கவாசகர், திருவாசகம், கோயில்திருப்பதிகம், பா.2
46. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.53
47. மேலது, பா.64
48. உமாபதி சிவாச்சியார், சிவப்பிரகாசம், பா.68
49. உமாபதி சிவாச்சாரியார், திருவருட்பயன்-42
50. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.239
51. உய்யவந்த தேவநாயனார், திருவுந்தியார், பா. 44
52. திருமூலர், திருமந்திரம், முதலாம் தந்திரம், பா.183
53. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா. 316
54. மெய்கண்டதேவர், சிவஞானபோதம், பயனியல் 12ஆம்சூத்திரம், பா.2
55. உமாபதி சிவாச்சியார், சிவப்பிரகாசம், 11ஆம் சூத்திரம், அணைந்தோர் தன்மை, பா.1
56. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.111

57. உமாபதி சிவாச்சாரியார், திருவருட்பயன், பா.99
58. சுப்புரெட்டியார், ந., சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம், ப.48
59. உமாபதி சிவாச்சாரியார், திருவருட்பயன், பா.2
60. சிவவாக்கியம், சிவவாக்கியர், பா.5
61. அருணந்தி சிவாச்சாரியார், சிவஞானசித்தியார், சுபபக்கம், பா.82
62. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.306
63. மாணிக்கவாசகர், திருவாசகம், கோயில் மூத்த திருப்பதிகம், பா.1
64. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.470
65. மெய்கண்டதேவர், சிவஞானபோதம், 2ஆம் அதிகரணம், பா.10
66. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா. 455
67. மேலது, பா.123
68. கங்காதரன், ச., சைவசித்தாந்த அடிப்படைக் கொள்கைகளும், வரலாறும், ப.103
69. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா. பா.496
70. மேலது, பா.423
71. தேவகி. எம்., சைவசித்தாந்தம் கூறும் மாயைக்கோட்பாடு, தமிழ்மாருதம் (மாதஇதழ்) ப.26
72. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.309
73. மேலது, பா.94
74. மேலது, பா.126
75. மேலது, பா.156
76. மேலது, பா.10
77. மேலது, பா.447
78. மேலது, பா.2
79. மேலது, பா.468
80. மேலது, பா.17
81. மேலது, பா.107

# சமயச்சிந்தனைகள்

மனிதவாழ்வில் கலை, இலக்கியம், அரசியல், பண்பாடு, வரலாறு போன்ற தளங்களில் சமயங்களின் பங்களிப்பு மற்றும் தாக்கங்கள் தவிர்க்க இயலாது அமைந்திருக்கின்றன. சித்தர் இலக்கியத்திலும் சமயத்திற்கு இடமுண்டு. உடன்பாட்டுநிலையிலும் மாறுபாடான கருத்தாக்கத்திலும் சமயத்தை அணுகும்போக்கைச் சித்தர்தம் பாடல்கள் தாங்கிநிற்கின்றன. அவற்றுள் சித்தர் சிவவாக்கியர் பற்றி ஆராயும்போது அவர்தம் சமயச்சிந்தனைகளைச் சிந்திக்கவேண்டியது இன்றியமையாததாகிறது.

தமிழகச் சித்தர்கள் ஒரே காலக்கட்டத்தில், ஒரே சமயத்தின் அடிப்படையில் தோன்றியவர்கள் அல்லர். வெவ்வேறு காலங்களில், வெவ்வேறு சமயப்பின்புலத்தில் தோன்றியவர்களாக இருந்தாலும் அவர்கள் யோகநெறியின்பாற்பட்ட பிறகு சித்தர்கள் என்ற வரைவிலக்கியத்திற்குள் வந்துவிடுகின்றார்கள். ஒருமை கொள்கிறார்கள். இதனை,

“பல்வேறு காலங்களில் பல்வேறு சித்தர்கள் தோன்றியிருக்கிறார்கள். ஆனால், தமிழகச் சமய வரலாற்றின் பின்னணியிலே சித்தர்களின் தோற்றம் ஆழ்ந்த பொருளுடையது. சித்தர்களும் மானுடக் குடும்பத்தின் அங்கத்தினர்கள்தாம். நாடு,மொழி, இனம், பண்பாடுகளால் பல்வகைப்பட்ட எல்லோரையும் தம் உறவினராகக் கருதி இயல்பாகப் பழகுபவர்கள்”[1] என்ற கருத்தாக்கம் உறுதிப்படுத்துகிறது.

மேற்சுட்டியவாறு, சித்தர்கள் வாழ்ந்தாலும், அவர்கள் காலச் சமய, சமுதாயச் சூழல்கள் இணக்கமாக இல்லை. ஆகவே, அவற்றை எதிர்த்துப் போராடவேண்டிய தேவை அவர்களுக்கு இருந்தது. வெவ்வேறு சூழல்களில் வெவ்வேறு இடங்களில் அவர்கள் வாழ்ந்தபோதிலும், அவர்களுக்குள் கருத்தொருமையும், ஆன்மவொருமையும் வலுவாக இருந்தன. அதனால்

அவர்கள் ஓர் இயக்கமாகவே செயல்பட்டிருந்தனர். பல்வேறு சாதி, சமயப் போக்குகளிடையே இணக்கம் காணவும், புதிய கருத்துருக்களை வடிவமைக்கவும் முயன்றனர். சடங்கு சம்பிரதாயச் சங்கிலிகளில் இருந்து மானுடத்தை விடுவித்து, ஆன்மவிடுதலை எய்த நெறிமுறைகள் வகுத்தளித்தனர். அந்த வகையில் சித்தர்களின் சமயச்சிந்தனைகள் புத்துருவெய்தத் தொடங்கின.

“தமிழ்ச்சமுதாயத்தை நிலைமாற்றி உருவாக்கிவந்த ஆற்றல்வாய்ந்த சில சக்திகளை எதிர்த்துப் புரட்சி செய்த ஓர் இயக்கத்தின் பிரதிபலிப்பாகவே சித்தர்கள் தோன்றினர். கிறித்துவம், தமிழகத்திற்கு வந்த காலத்தை ஒட்டியோ, அல்லது அதற்குச் சற்று முந்தியோ தமிழகம் வந்த வேதியர், பௌத்தர், சமணர் ஆகியோர் தங்கள் கல்வி ஒழுக்க சீலங்களால் தமிழக மக்களின் ஒருசாராரைத் தம் வசப்படுத்தி இருந்தனர். வைதிக கலாச்சாரத்துடன் வருணாச்சிரமமும் வேள்விப்பண்பாடும், சமண,பௌத்தமும் பரவி வந்தன. சிறிதும் பாதிப்பின்றி பூர்வசமயாச்சாரம் நீடித்து நிலவி வந்த சமுதாயத்திலே இவற்றால் மாறுதல் தொடங்கியது. சமயவாதங்கள் நிகழ்ந்தன. காலம் செல்லச்செல்லக் கடவுளின்பேரால், சமயத்தின் பேரால், வேற்றுமைகளை உண்டாக்கினர். புதிதுபுதிதாக உருவான சமயக்கிளைகள் மக்களைப் பிரித்து வைத்ததோடு அவர்களிடையே பகைமை உணர்வையும் வளர்த்தன. ஒற்றுமையின்மை ஆகிய வேண்டத்தகாத உணர்வுகளையும் வளர்த்தன”[2]

மேலும், வைதிகத் தாக்கத்தினர் சாதி வேலிகளை இட்டனர். சமய மதில்களை எழுப்பினர். சாத்திர அகழிகளைத் தோண்டினர். இப்படிச் சமுதாயத்தில் சாதிசமயத்தின்பேரால் உருவாக்கிவந்த வைதிகர் ஆதிக்கத்தையும் கண்மூடித்தனமான பழக்கவழக்கங்களையும் அவ்வப்போது எதிர்த்துக் குரல் கொடுத்தவர்களே சித்தர்கள் . அடிப்படைத் தத்துவங்களில் நம்பிக்கையும், கடவுள் பற்றும் கொண்டு வாழ்ந்தவர்கள் சித்தர்கள். ஆனால்,

இவர்கள் சடங்காச்சாரம் தவறுதலாகப் பொருள் செய்யப்படுவதையும், சாதிக்கொடுமைகள் அமுல்படுத்தப்படுவதையும் கடுமையாக எதிர்த்தார்கள். சடங்கு சம்பிரதாய மறுப்பும், பக்திமுறை மறுப்பும் சித்தர்களின் குறிப்பிடத்தக்க சமயக் கொள்கைகளாகக் கொள்ளப்பட்டனர்.[3]

என்பதிலிருந்து மேற்சுட்டிய கருத்துக்கள் உறுதிப்படுத்தப்படுவதைக் காணமுடிகிறது. இத்தகு பின்னணியில் இயங்கிய சித்தர்களின் சமயக்கருத்தாக்கங்களின் ஆக்கத்திற்குச் சிவவாக்கியர் பெருமளவில் பங்களித்திருப்பதைக் காணமுடிகிறது. அது குறித்துப் பின்வருமாறு விரிவுறக் காணலாம்.

## சிவவாக்கியரின் சமயச் சிந்தனைகள்

சித்தர் சிவவாக்கியர் காலத்தில், சைவமும் வைணவமும் பேரெழுச்சி பெற்றிருந்தன. ஆழ்வார்களும், நாயன்மார்களும் உருவாக்கிய வரலாற்றுத் தடங்களைத் தாங்கிக் கோயில்களும் சடங்கு சம்பிரதாயங்களும் விரிவடைந்தன. காலப்போக்கில், அவற்றின் ஆழ்பொருள்களை விடுத்து வெற்றாரவாரமிக்கவையாக அவை மலிவுறத் தொடங்கின. வழிபாட்டுநிலையிலும், வாழ்வியல் போக்கிலும் இடைத்தரகர்கள் மிகுந்தனர். ஆன்மிகம் தடமாறியது. உட்பொருள் இழந்து, பொருள் குவிக்கும் கருவியாகச் சமயம் ஆக்கப்பட்டது. அடிப்படை நோக்கத்தைவிடுத்து, ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொள்ளச் சமயங்களை முதன்மைப்படுத்திப் பூசல்கள் எழுந்தன. மக்கள் மனிதத்துவத்தை விட்டு, மதப்பூசல்களுக்குப் பலியாகத் தொடங்கினர். அவர்களைக் காக்கவும், சமயநெறிகளைச் செம்மைப்படுத்தவும் முயன்ற சித்தர்கள் பணியைச் சிவவாக்கியர் சிறப்புறச் செயல்படுத்தியிருப்பதையும் காணமுடிகிறது. எனவே, 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'[4] என்னும் திருமூலரின் வாக்கைப் பின்பற்றி, சிவவாக்கியரும் தமிழ்மக்களிடையே சமயப் பொதுமையை நிலைநாட்ட முனைந்துள்ளார்.[5]

**சிவவாக்கியர் உணர்த்திய சமயப்பொதுமை**

சித்தர் சிவவாக்கியரின் காலம், சைவ, வைணவப் பிரிவினைப்போர் தலைவிரித்து ஆடிய காலமாகும். வாழ்வியல் நோக்கில் ஒன்றுபட வாழும் மக்கள், வழிபாட்டுநோக்கில் பிரிந்து பகைமை வளர்த்துத் தம்மை அழித்து ஒழிந்துபோவதில் உடன்பாடில்லாத நிலையில், இருசமய இணைப்பைச் சிவவாக்கியர் தம் பாடல்களின் வாயிலாக, அழுத்தமாக வலியுறுத்தத் தொடங்குகிறார். அதற்காக,

“சிவாயமென்ற வச்சரம் சிவனிருக்கு மச்சரம்
உபாயமென்று நம்புதற்கு உண்மையான வச்சரம்”[6]

என்று சிவநாமத்தின் பெருமைகூறிச் சைவர்களை அழைக்கிறார் சிவவாக்கியர்.

“சதாவிடாம லோதுவார்கள் தமக்குநல்ல மந்திரம்
இதாமி ராம ராமராம ராமவென்னும் நாமமே”[7]

என்று பாடி வைணவர்களையும் ஈர்க்கிறார். பின் இரண்டு பிரிவினரையும் ஒரேசேர நோக்கி,

“தில்லைநா யகனவன் திருவரங்க னுமவன்
எல்லையான புவனமு மேகமுத்தி யானவன்”[8]

என்று இரண்டு தெய்வமும் ஒன்றுதான் என்பதை உணர்த்துகிறார்.

“அரியும் சிவனும் ஒண்ணு
அறியாதவன் வாயில மண்ணு”

என்பது நாட்டுப்புறச் சொலவடையாகிய எழுதாக் கிளவிகளுள் ஒன்று. அந்த மரபை மேலெழுப்பி,

"அப்பும் உப்புவும் என்ற உவமைவழி,

நாழியுப்பு நாழியுப்பு நாழியான வாறுபோல்"[9]

என்ற உவமை காட்டுகிறார். அதாவது, நாழி அளவு உப்பானது நாழியளவு நீரில் கரைந்து ஒன்றிவிடுவதுபோல், சிவனும் மாலும் ஒன்று கலந்து நிறையும்பாங்கை எளிமைப்படச் சிவவாக்கியர் விளக்கிவிடுகிறார்.

அத்துடன், சிவன் திருமால் ஆகிய இருவருக்கும் அப்பால் மேம்பட்டது, 'பரம்பொருள்' ஆகும். அது ஒன்றே என்று உரைக்கிறார். அது,

"அரியுமல்ல வரனுமல்ல வப்புறத்தி லப்புறம்

கருமை செம்மை வெண்மையைக் கடந்துநின்ற காரணம்"[10]

என்று ஒன்றென நின்ற பரம்பொருளின் உண்மையை உலகிற்கு உணர்த்துகிறார். மேலும், அப்பரம்பொருளை அடைவதற்கான வழிமுறைகளையும் பின்வருமாறு சுட்டிக்காட்டுகின்றார் சிவவாக்கியர்.

"உருத்தரித்த நாடியி லொடுங்குகின்ற வாயுவை

கருத்தினா லிருத்தியே கபாலமேற்ற வல்லிரேல்"[11]

என்று சொல்லி, அதை, 'நாடி நாடி நாடி உம்முளே நயந்து காண'[12] வேண்டும் என்கிறார். அப்போது, இருவரும் ஒருவராய் இரண்டறக் கலந்து,

"தெளிந்த ஞானம் நான்கினுஞ் சேரலாஞ் சாயுச்சியமே"[13]

எனத் தமது சித்தர்மரபில் ஒன்றுபடும் யோகநெறியை, மக்கள் மனதில் நிலைநிறுத்த முனைகிறார். அதற்கான தம் குறிக்கோளைத் தெளிவாகக் குறிப்பிடுகிறார். அத்தகு யோகநெறியில் நின்று தன்னுள் கடவுளைக் காணமுடியும் என்று காட்டுகிறார். 'வானில் மின்னல் எழுந்து பரந்து தோன்றி பின்னர் அதே வானில் மறைந்து போவதுபோல, இறைவன் தன்னுள் தோன்றி ஒளிர்ந்து தன்னுள் மறைகிறான்' என்பதை,

"மின்னெழுந்து மின்பரந்து மின்னொடுங்கு வாறுபோல்

என்னுள் நின்ற வெந்நுனீச நின்னுளே யடங்குமே"[14]

என்று கூறித்தன்னுள் தோன்றும் கடவுட்காட்சி அனுபவத்தையும் கனிவுடன் கூறுகின்றார். 'இந்தக் கடவுளே, சிவன்; அவனே திருமால்; தத்தம் கடவுளர் என்று சண்டையிட்டுக் காட்டிக் கொள்ளும் ஒற்றைக் கடவுள். ஒளிவடிவமான இறைவனைத் தாம் கருதிய உருவடிவில் வைத்துச் சண்டையிட்டுக் கொள்ளும் மூடரோ, அவன் ஒளிவடிவான இறைவனைத் தாம் கருதிய உருவடிவில் வைத்துச் சண்டையிட்டுக் கொள்ளும் மூடரே. அவன் அங்கும் இங்கும் உள்ளான் என்று தேடிக் கண்டலைகிற அறிவிலிகளே. அவன் உம்முள்ளே எழுந்து நிறைந்து உம்முளே மறைந்தும் நிற்கிறான்' என்று உணர்த்துவதற்காக, கண்ணில் காணமுடிகிற மின்னலைக் காட்டி, கண்ணால் காண இயலாக் கடவுளின் தன்மையை நுட்பமாக உணர்த்துகிறார்.

இவ்வழி சித்தர் சிவவாக்கியர் சமயப்பொதுமையை வலியுறுத்து கின்றார். அவர், மெய்ப்பொருளான பரம்பொருள் ஒன்றே என்னும் கொள்கை உடையவர். ஒருவனென்ற தெய்வத்தை வணங்கி, உத்தமனாய் உலகில் வாழும் நெறியை விளக்குகிறார் சிவவாக்கியர் என்பர்[15] இதன்வழி தெளிவுறாகிறது. இவ்வாறு இறையொருமை காட்டிய சிவவாக்கியரின் செந்நெறி இன்னதெனத் தனித்துக் காணவும் வேண்டியதாகிறது.

## சிவவாக்கியர் காட்டும் செந்நெறி

மனிதனாகப் பிறந்திருந்தும் தெய்விகப் பெருநிலைக்கு உயர்ந்துள்ளவர்கள் சித்தர்கள் ஆவர். அவர்கள் உடம்பின் உள்ளேயே ஆன்மாவை ஒடுக்கி அழியாத உடம்புடன் ஆண்டாண்டு காலமாய் ஞானத்தில் திளைத்திருப்பவர்கள்; அசையாமல் அமர்ந்துகொண்டு அண்டிவருபவர்களுக்கெல்லாம் அருளமுதம் வழங்கிக் கொண்டிருப்பவர்கள். இத்தகு பேராற்றலை எல்லாரும் பெற முடியும் என்பதற்கான நுட்பங்களைச் சிவவாக்கியர் பாடல்கள் எடுத்தியம்புகின்றன. அவற்றைப் பின்வரக் காணலாம்.

## யோகம்

சித்தர்நெறியில் சிறப்பான இடம்பெறுவது யோகம் ஆகும்.

"யோகம் என்ற சொல்லுக்கு மனத்தை ஒன்றுபடுத்தும் முயற்சி என்று பொருள் உரைப்பர்.[16] இதனை, "இறைவனோடு ஆன்மா ஒன்றுபடும் நிலை எனவும், பொருள் கூறுவர்.[17] இச்சொல், வடமொழியில் இருந்து வந்ததென்பர். அதாவது, யோகம் என்னும் வடசொல்லானது, 'யுஜ்' என்னும் அடிச்சொல்லிலிருந்து வந்தது. 'யுஜ்' - ஒன்றுபடுத்துதல் - இணைத்தல்' என்ற பொருள் தரும்.[18]

யோகம் என்பது மனத்தைக் கட்டுப்படுத்தி அகமுகமாகக் கடவுளைத் தன்னுள்ளே உணர்வதாகும். மனம் ஆசைகளால் அலைக்கலைக்கப்பட்டால், உலக விவகார விடயங்களால் ஓடினால்- அமைதி அடையாவிட்டால் ஆத்மஞானம் அடைவது எளிதன்று. 'வெளியில் பரவி சலித்துக் கொண்டிக்கின்ற தன்னுடைய சக்தி எப்பொழுது வெளியில் சலிக்காமல் தன்னில்தானே லயிக்கிறதோ, அப்பொழுது யோகமாகிறது' என்கிறது சித்தவேதம்.[19] கருமயோகம்- பக்தியோகம்- கடயோகம்- ராஜயோகம்- அஷ்டாங்கயோகம்- ஞானயோகம் முதலிய பல பெயர்களையுடைய முறைகளெல்லாம் மனம் என்ற ஒன்றை அடக்கும் வழிகளேயாம். இதற்குப் பல யோக நூல்கள் துணைபுரிகின்றன.

பரம்பொருளான கடவுளோடு உயிரானது இணைகிற வழி முறைகளைச் சொல்லுகின்ற நூல்கள்தாம் யோக நூல்கள். யோகநிலை பற்றிக் கூறும் முதல்நூல் பதஞ்சலியோக சூத்திரம். சுவாமிவிவேகானந்தர் தமது ராஜயோக நூலில் பதஞ்சலிசூத்திரம் நான்கு பாதங்களையும் இணைத்துள்ளார். இதில் கூறப்படும் அட்டாங்க யோகமான, 'இயமம், நியமம், ஆசனம் ஆகிய இவை மூன்றும் உடற்பயிற்சி. மனத்தின் பங்கும் சிறிதுள்ளது. பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை இவை மனப்பயிற்சி. இதில் ஆன்மாவின் பங்கும்

சிறிதுளது. தியானம், சமாதி இவை ஆன்மப்பயிற்சி' என்று தெளிவாக வகைப்படுத்திக் காட்டுகின்றார் டாக்டர் மாணிக்கவாசகம்.[20]

**நால்வகைத்தொழில்**

பிறவி முத்தி பெறுவதற்கு சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் நான்கு படிகளை ஏறவேண்டும். சரியை என்றால், ஒழுக்கம், கிரியை என்றால் இறைவனது ஆகமங்களில் விதித்துள்ளவாறு புறத்தொழிலானும் அகத்தொழிலானும் வழிபடுதல். யோகம் என்பது ஆழ்ந்த நிஷ்டை. இயமம், நியமம், பிரத்தியாகாரம், ஆசனம், பிராணாயாமம், தாரணை, தியானம், சமாதி என்பது அஷ்டாங்க யோகமாகும். 'ஞானம்' என்பது அனைத்தையும் அறிவும் அறிவு ஆகும்.[21] சரியையாளர் பக்தர். கிரியையாளர் தொண்டர். யோகியர் சாதகர். ஞானியர் சித்தர் ஆவர்.[22]

மேற்சுட்டிய ஒவ்வொரு படியிலும் தெளிநிலை எய்துபவர்கள் அவ்வப் படிகளுக்குரிய பேறுகளைப் பெறுவர். சரியையில் தெளிவடைந்தோர் சாலோகம் என்னும் பேறு பெறுவர். கிரியையில் தெளிவடைந்தோர் சாமீபம் என்னும் பேறடைவர். யோகத்தில் தெளிவடைந்தோர் பெறுவது சாரூபம் என்னும் பேறாகும். ஞானத்தில் தெளிவடைந்தோர் சாயுச்சியம் என்னும் பேறு பெறுவர் என்பதைச் சிவவாக்கியர் தெளிவுபடுத்துவதை அறிய முடிகிறது.

"அங்க சுத்தியு மாலயந்தொழுவதும்
சரியையென் றறைவார்கள்
மங்களத்துட வட்டமா சித்தியும்
வரையும் சக்கரப்பூசை
பொங்கமாவது கிரியையாம் வாயுவை
இரண்டிடா திழுத்திட்டு
தங்கிநின்றதோர் யோகமென் றிதனையே
சாற்றிடு மறைதானே"[23]

எனவும்,

"ஞானமோ வெனக் கேட்டிடின் தத்துவம்
நானென உணர்ந்திந்த
ஊனை நானென உரைத்ததை யகன்று
பின்னொளிவளத் தனைக் கண்டு
மானம் வெட்கமும் துக்கமும் கவலையும்
வஞ்சனை தான்போக்கி
வீனமற்று நான் சிவமெனத் துணிந்தது
மிடிந்தது முடிவாமே"[24]

என்றும் சிவஞானபோதம் சிறப்பாக விளக்கம் தருகிறது. இம்முடிவான மேனிலையை அடையும் வழிமுறை சித்தர்நெறி எனப்படும். இதற்குச் சித்தவித்தை என்றும் பெயர். வித்தை என்றால் கல்வி என்று பொருள். சித்தவித்தை என்பது புறக்கல்வியன்று. அகக்கல்வி ஆகும்.

இக்கல்வியை அருளும் சித்தர் காடுகளிலும் மலைகளிலும் குகைகளிலும் மட்டுமன்றி ஊருக்குள்ளேயும் இருக்கிறார்கள். இவர்கள் தங்கள் ஆற்றலை மக்கள் நலனுக்காக்குகிறார்கள்.

பிரம்மவித்தை, தாரகமந்திரம், அஜபாகாயத்ரி, சாகாக்கலை, பஞ்சாச்சரம், அட்டாச்சரம், ஏகாச்சரம், ஓங்காரம், வெட்டாதசக்கரம், சொல்லாத மந்திரம், ஊமை எழுத்து, ஒருமொழி, அமிர்தசஞ்சீவினி என்னும் பல பெயர்களால் இச்சித்தவித்தை அழைக்கப்படுகிறது. இப்பயிற்சியைச் செய்வதற்கு நாடு,மொழி, இன, சாதி, வயது முதலான பேதங்களோ, பிற தடைகளோ கிடையாது. யாரும் மேற்கொள்ளலாம். இந்த சித்தவித்தையைத் தக்க குருவிடம் நேரில் பெறவேண்டும் என்பது நியதி. இதனை, சிவவாக்கியர்,

"குருவினால் தெளிந்துகொண்டு கோதிலாத ஞானமாம்"[25]

என்று குறிப்பிட்டுச் சொல்லுகிறார்.

**வாசியோகம்**

யோகநெறியில் குறிக்கத் தக்க ஒன்று வாசியோகம் ஆகும். சித்தர்கள் கண்ட சித்தவித்தைதான் வாசியோகம். வாசியோகம் வேறு. பிராணாயாமம் வேறு. வாசி என்பதைத் திருப்பிநோக்கினால் சிவா என்று ஆகும். இந்த சிவயோகக் கலையே சித்தர்களின் கலையாகும். வாசி என்பது உயிர்மூச்சு. அதாவது, மூச்சுக் காற்று. இதனை,சிவவாக்கியர் வாசி[26] என்று கூறுவதுடன் வாயு[27] என்றும் மாருதம்[28] என்றும் குறிப்பிடுகின்றார். 'வாசி சித்தநாதன்'[29] என்று இறைவனைச் சிவவாக்கியர் குறிப்பிடுகின்றார். சித்தர்நெறி சாவிலிருந்து தப்பும் காயசித்தி மார்க்கத்தை அடிப்படையாகக் கொண்டதாகும்.

இவ்வாசியை, 'ஜீவசக்தியுமாகிய வாயு'[30] என்கிறார் சுவாமி சிவானந்த பரமஹம்சர். இதனை, 'ஜீவகாந்தசக்தி' என்று உரைக்கிறார் வேதாத்திரி மகரிஷி[31] வாசியோகம் என்பது மூச்சை அடக்குவது அன்று. உரிய முறையில் உள்ளில் கூடி மேல்நோக்கி நெறிப்படுத்தல் ஆகும். இது மூச்சுக்கலை பற்றிய நுட்பமான அறிவாகும். இதற்கான பயிற்சிக்காலம் பின்வருமாறு சுட்டப்படுகிறது.

**பயிற்சிக்காலம்**

"நடக்கினும் வாசிபாரு நாட்டமும் வாசிபாரு
முடக்கினும் வாசிபாரு முனைச்சுழி வாசிபாரு"[32]

என்பதற்கேற்ப, நிற்கும்போதும், நடக்கும்போதும் இருக்கும்போதும் எந்த ஒரு வேலையைச் செய்யும் போதும் இப்பயிற்சியை உள்வழியாகச் செய்துகொண்டே இருக்கலாம். என்றாலும் பிரம்மமுகூர்த்தம் எனப்படும் அதிகாலை 3 மணிமுதல், 4.30 மணிவரை உள்ள நேரமும், மாலை அந்தி நேரமும் இதற்குரிய சிறப்பான நேரங்களாகும். இதனை சிவவாக்கியர்,

"காலமே எழுந்திருந்து"[33]

"காலை மாலை வாசிபாரு முனைச்சுழி வாசிபாரு"[34]

என்றெல்லாம் குறிக்கிறார். காகபுசுண்டர்,

“கூறாத மந்திரத்தின் குறியைப் பார்த்து
சித்தம் ஒன்றாய் அந்திசந்தி யுச்சிக் காலம்”[35]

என்று உச்சிக்காலத்தையும் சேர்த்துக் கூறுவது உரிய நேரங்களை உறுதிப்படுத்துகின்றது.

**ஆசனம்**

வாசியோகப் பயிற்சியைச் செய்யும்போது, ஏகாந்தமான தனியிடத்தில் சந்தடியற்ற அறையில் அதிகநேரம் இருப்பாக அமரக்கூடிய ஆசனத்தில் உட்காரவேண்டும். வெறும் தரையில் அமரக்கூடாது. மின்சாரம் தரையில் இறங்குவதுபோல், வாசியோகப்பயிற்சியின்போது பெறக்கூடிய ஆற்றல் முழுவதும் அப்படியே தரையில் இறங்கிவிடும். அதனால் அமரும் ஆசனத்தில் இருப்பு நிலை சரியாக அமையவேண்டும். இது அமரும் ஆசனம் எனவும், இருப்பு ஆசனம் எனவும் இருவகைப்படும். அமரும் ஆசனம் என்பது உட்காரும் அளவுள்ள மரப்பலகை. இது அதிஉயரம் இல்லாமல் ஓரங்குல உயரம் இருப்பது நல்லது. அப்பலகையின்மீது விரிப்பை விரித்து, அமர வேண்டும். இருப்பு ஆசனம் என்பது உடலின் உறுப்புகளை ஒவ்வொரு விதமாகவும், அமைத்துக்கொள்ளும் முறையாகும். அவை, திரிகோண ஆசனம், ஹஸ்தபாத ஆசனம், சவாசனம், சர்வாங்க ஆசனம், ஹலாசனம், மத்தியாசனம், புஜங்காசனம், சலபாசனம், தனுராசனம், சக்கராசனம், மகராசனம், மயூராசனம், குக்கடாசனம், வஜ்ராசனம், பச்சிமோத்ஆசனம், அர்த்தமத்தியேந்திராசனம், பத்மாசனம், சித்தாசனம், சுக ஆசனம்[36] முதலியனவாகும். இத்தனை ஆசனங்களிலும் வாசியோகப் பயிற்சிக்கு பத்மாசனம் தான் எளிமையானது. சிறப்புடையது. விரைந்து பயன்தர வல்லது என்பதைச் சிவவாக்கியர்,

“வடிவபற்ப வாசனத்திலிருத்தி”[37] என்று அறிவுறுத்துகிறார். பத்மாசனம் என்பது இரண்டு தொடைகளில் இரண்டு பாதங்களையும் மாற்றியமைத்து

செவ்வையாக உட்காருதல், அமரும்போது மான்தோல், புலித்தோல், வெண்துகில், சித்திராசனம், தர்ப்பை ஆகியவற்றை விரிப்பாகப் பயன்படுத்த வேண்டும்.

இடை, வயிறு, கண்டம், தலை, சமனாய் கம்பத்தைப்போல் நிமிர்ந்திருக்க வேண்டும். இதில் இல்லறத்தாருக்குப் பத்மாசனம் என்றும், துறவறத்தார்க்குச் சித்தாசனம் என்றும் ஹடயோக தீபிகையில் சொல்லப்பட்டிருக்கிறது.[38]

**பார்வைநிலை**

வாசியோகப் பயிற்சியின்போது, அதாவது, அப்பியாச சாதனைப் பயிற்சியின்போது, கண்களை மூடக் கூடாது. கண்கள் திறந்த நிலையில், மூக்கின் மேல்நுனியில் நுனி, புருவமத்தி ஆகிய சந்திப்பு இடத்தில் கருவிழிகளைச் செருகிக் கொண்டு, சமநோக்காக இருக்க வேண்டும். இதனைச் சொல்வரும் சிவவாக்கியர், பட்டத்தைப் போன்று உயிர்பறந்து கொண்டும், கயிற்றைப் போன்று உடம்பு இருந்துகொண்டும், இவற்றை இயக்கும் ஈசனால் இயங்கிக்கொண்டுள்ளது. இதில் அந்த ஈசனை உன் பார்வையினாலேயே பார்த்து மூச்சுக் காற்றைக் கும்பகத்தால் நிறுத்திப் படுமுடிச்சுப் போடவேண்டும்.[39]

விழித்திருந்து அகக்கண்ணை நோக்கி எண்ணங்களை அங்கேயே குவித்தால் ஓங்காரம் பஞ்சாட்சரம் என்ற எழுத்துக்கள் எல்லாம் அங்கேயே அமைந்துபோய் மெய்யான மௌனம் கிட்டும்.[40]

வாக்கினாலும் மனத்தினாலும் இறைவனை எந்நேரமும் நேசமுடன் பூசித்து யோக ஞானத்தை மதித்துக் கடைப்பிடித்த காரணத்தால் உண்மையான பரம்பொருளின் காட்சி கிட்டும். நோக்கொணாத நோக்கை அகக்கண்ணால் நோக்கித் தியானியுங்கள்[41] தியானத்தில் இருந்து விழித்த கண்கள் உன்னைத் துதித்திருந்தது[42] என்று விளக்குகிறார்.

சிவவாக்கியர் இக்கருத்திற்கு, “யோகியானவர் யோகதீபம் ஏற்றி, யோகபீடத்தில் ஆசனமிட்டு அமர்ந்து, கங்காமுத்திரை பிடித்த நிலையில் இரண்டு கண்களையும் நன்கு அகலத்திறந்து இரண்டு கருவிழிகளையும் புருவத்தின் மையத்தில் கொண்டு வந்து அவ்விடத்தைப் பின்பு மெதுவாக இருவிழிகளையும் சிரசின் உட்புறம் பார்க்கும்பொருட்டு, மேல்நோக்கித் திருப்பி நெற்றியின் மத்தியில் இரு புருவங்களுக்கு இடையிலிருந்து ஓர் அங்குல உயரத்தில் பார்வையை நிலைத்தபடி அப்படியே அசைவற்று இருக்க வேண்டும்… இங்ஙனம், யோகவேதம்[43] தரும் விளக்கம் வலுவூட்டுகிறது.

இமயமலைப்பகுதியில், கணவேகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த ஒரு மனிதனின் முகம் முற்றும் சாந்தமாகவும், எந்த உணர்ச்சியும் காட்டாததாகவும் இருந்தது. அகலத்திறந்த கண்விழிகளின் பார்வை விண்ணின் உயரத்தில் எங்கோ நிலைத்திருக்கும் கண்ணுக்குத் தெரியாத பொருள் ஒன்றின்மேல் நிலை குத்தி நின்றது என்னும் செய்தி உண்மையை நிலைநிறுத்துகின்றன.[44]

## முத்திரை

முத்திரை என்பது ஆசனங்களுடன் இணைந்த செயல்முறைகள் ஆகும். அதாவது, பயிற்சியின் போது கைவிரல்களைக் குறிப்பிட்ட வடிவத்தில் அமைத்துக்கொள்ளலாம். இதற்கு, முத்திரா என்றும் முத்திரை என்றும் பெயர்.

இம்முத்திரைகள், மகாமுத்திரா, ஆகாயமுத்திரா, பிதேகரினிமுத்ரா, கேசரிமுத்ரா, சக்திசனை முத்ரா, வஜ்ரோலிமுத்ரா, யோகமுத்ரா, சண்முகிமுத்ரா, சாம்பவிமுத்ரா, யோனிமுத்ரா, பைரவிமுத்ரா என முத்திரைகள் பல வகைப்படும். சிவவாக்கியர் இதனை முடிவு முத்திரைப்படுத்தி…[45] என்று குறிப்பிடுகிறார்.

## மூச்சுக்கணக்கு

வாசியோகத்தில் செய்யப்படும் மூச்சுப் பயிற்சிக்கும் ஒரு கணக்கு உண்டு. திருமூலர்,

“காற்றைப் பிடிக்கும் கணக்கு”[46] என்கிறார்.

இக்கருத்தை,

“மூச்சறிந்து விட்டபின்”[47]

என்று சிவவாக்கியர் மொழிகின்றார். இக்கணக்குப் பின்வருமாறு.

சுவாசத்தை ஒருதடவை இயல்பாக உள்ளே இழுத்து, வெளியே விட்டால், அது ஒரு மூச்சு ஆகும். ஒரு நாழிகைக்கு 360 மூச்சு. 60 நாழிகை கொண்டது ஒருநாள். நாழிகை ஒன்றுக்கு 360 சுவாசங்கள். 60 நாழிகைக்கு 21600 சுவாசங்கள். எனவே, ஒரு நாளைக்கு மொத்தம் 21600 மூச்சு நடக்கிறது. மூச்சின் உற்பத்தித்தலமாகிய பிரம்மரந்திரம் எனப்படும் உச்சந்தலையிலிருந்து மூக்கு நுனி வரை பனிரெண்டு அங்குலம். ஆகவே, சாதாரணமாக வெளிவரும் மூச்சின் நீளம் 12 அங்குலம். மீண்டும் சுவாசத்தை உள்ளே இழுக்கும்போது, திரும்பவும் உள்மீளும் மூச்சு 8 அங்குலம். ஒரு மூச்சின்போது ஆகும் இழப்பு 4 அங்குலம். இவ்வாறு ஒவ்வொரு மூச்சுக்கும் 4 அங்குலம் ஜீவசக்தி நட்டமாகிக் குறைந்துகொண்டே வந்தாலும் மனிதன் 120 ஆண்டுகள் உயிர் வாழலாம்.[48]

ஆனால், எல்லாரும் 120 வயதுவரை வாழ்வதில்லை. ஏனென்றால், சாதாரணநோக்கில் 12 அங்குலமாகப் போகும் மூச்சின் நீளம் சாப்பிடும்போது, 18 அங்குலமாகப் போகிறது. அதுவே, நடக்கும்போது24 அங்குலமும் ஓடும்போது, 42 அங்குலமும் யோகத்தின்போது 50 அங்குலமும் தூங்கும்போது 60 அங்குலமும் போகிறது.[49]

இப்படி எத்தனையாவது வயது நடந்துகொண்டிருக்கும்போது உயிர்மூச்சின் சத்து முழுவதுமாக இழந்துபோய்விடுகிறதோ, அப்போது மரணம் நேர்கிறது. சத்து முழுவதும் தீர்ந்து போன இதைத்தான் செத்துப்போச்சு என்பர். மூச்சு இழப்பினால் செத்துப்போவதையே இழவு என்பர். இதனை, சிவவாக்கியர்,

“இழையறுந்து போவதும்..”[50]

என்று நயமாகக் குறிப்பிடுகின்றார்.

மூச்சு விடுதலில் ஏற்படும் நட்டங்களைத் தவிர்க்கவேண்டும் எனவும், அதற்குரிய வழியையும் சிவவாக்கியர் மூன்று பாடல்களில் குறிப்பிடுகின்றார். இரண்டு பாடல்களில் மறைமுகமாகவும், ஒரு பாடலில் வெளிப்பட உவமம் கூறியும் குறிப்பிடுகின்றார். அவை,

1. தாரை ஊதுதல்
2. நாலுகட்டு அறுத்தல்
3. துருத்தியும் கொல்லனும்

என்பவையாகும்.

## தாரை ஊதுதல்

தாரை என்பது அண்ணாக்கின் உள்ளில் கூடி மேல்நோக்கி, அமைந்துள்ள சன்னமான குழல்போன்ற அமைப்பு ஆகும். சிவவாக்கியர் மூக்கின் இரண்டு துவாரங்களை,

“சங்கிரண்டு”[51]

என்று குறிப்பிட்டு, மூக்குத் துவாரங்களாகிய சங்கிரண்டின் மூலம் சுவாசிப்பதைத் தவிர்த்துவிட்டு, உள் தாரையின்வழியாக, மூச்சை முறைப்படி, அண்ணாக்கின்வழியாக மேல்நோக்கி ஊதி நடத்துங்கள் என்கிறார். இது வாசியோகத்தின் முக்கியமான செயற்பாடாகும்.

## நாலுகட்டு அறுத்தல்

“மூலமாம் குளத்திலே முளைத்தெழுந்த கோரையை
காலமே எழுந்திருந்து நாலுகட் டறுப்பிரேல்
பாலனாகி வாழலாம் பரபிரம்மம் ஆகலாம்

ஆலமுண்ட கண்டர்பாதம் அம்மைபாதம் உண்மையே"[52]

இது சிவவாக்கியர் வாக்கு. இங்கே கோரை என்பது நேர்காற்று. மூலமாம் குளம் என்பது சிரசின் உச்சி. கோரை என்பது தலைஉச்சி அளவு முட்டிப் பாயக்கூடிய உள் காற்றாகிய வாசி. இவ்வாசியை உள்ளே கூடி, மேலும் கீழும் ஊத ஊத, வெளியிலே காற்றுக் குறையும். ஒவ்வொரு மூச்சுக்கும் மூச்சின் அளவு மேற்கண்ட முறையில் இழப்பு ஆகும். நான்கு அங்குல வாசியை இழக்கவிடாமல் சேமித்தலே அக்கோரையை நாலுகட்டு அறுத்தல் எனப்படும். இதனால் என்றும் இளமைப்பருவத்தோடு இருக்கலாம். பரபிரம்மநிலை எய்தலாம் என்று சிவவாக்கியர் அறுதியிட்டுக் கூறுகிறார்.

## துருத்தியும் கொல்லனும்

துருத்தி என்பது மேற்கூறிய தாரையாகிய சுஷுமுனா நாடியாகும். கொல்லன் என்ற சொல் உயிரைக் குறிப்பதாகும். துருத்தியை ஊத, ஊத துருப்பிடித்த இரும்பும் தங்கமயமாக ஒளிவிடும். இதுபோல் வாசி கொண்டு உள்ளில் கூடி ஊத, ஊத ஒளிமயமான (தேஜோரூபமாகிய) இறைவனும் யோகியும் தவிர, வேறொருவர் அவ்விடத்தில் காணப்படமாட்டார்கள்.[53]

இச்சோதி நிலை அடையத்தான் உள்ளேயே ஊதச் சொல்லுகிறார் சிவவாக்கியர். இப்படி உள்ளே ஊதும் முறையை ஒருவன் உண்மையாக அறிந்துகொள்வானேயானால் அவன் ஒரு சித்தனாவது திண்ணம்' என்று உரைக்கிறார் அகத்தியர். இதனை அவர்,

"ஊதியதோர் ஊதறிந்தால் அவனே சித்தன்"[54] என்று அறுதியிட்டுக் கூறுகிறார்.

## ஆறு ஆதாரங்கள்

நரம்புமண்டலமானது, உடம்பிலுள்ள வேறு மண்டலங்களை இணைத்துச் செயல்படுகிறது. மேலும், சிறப்புத் தொழிலாகிய அறிவாற்றலுக்கு

நரம்புமண்டலமே முக்கியக் காரணமாகும். இம்மண்டலத்தில் முதுகுவடம் முதுகுத் தண்டு எலும்புக்குழாயினுள் பாதுகாக்கப்பட்டிருக்கின்றது. இதன் அடிப்பகுதிக்கு மூலாதாரம் என்று பெயர். உடம்பு முழுவதும் நெருக்கமாகப் பரவியுள்ள கோடிக்கணக்கான நரம்புகள் முதுகுவடத்தின் ஆறு இடங்களில் கூடிப்பிரிகின்றன. இவ்விடங்கள் ஆதாரங்கள் என்றும் கமலங்கள் என்றும் சக்கரங்கள் என்றும் அழைக்கப்படுகின்றன.

மூலாதாரத்திற்கு மேலே இடுப்புக்குழியில் உள்ளது சுவாதிட்டான சக்கரம். இதிலிருந்து பிரியும் நரம்புகள் உயிர்க்குறியுடன் தொடர்புடையன.

மணிபூரகசக்கரம் தொப்புளுக்கு நேர் பின்னால் முதுகுத் தண்டில் உள்ளது. இதிலிருந்து புறப்படும் நரம்புகள் வயிற்றை இயக்கி உணவு செரிக்கவும் தன்வயப்படுத்தவும் உதவுகின்றன.

இதற்கு மேலே உள்ளது அனாகத சக்கரம். இது இருதயத் துடிப்பைக் கட்டுப்படுத்திக் குருதி ஓட்டத்தைச் செம்மைப்படுத்துகிறது.

விசுக்தி சக்கரம் கழுத்தில் இருக்கிறது. இங்கிருந்து பிரியும் நரம்புகள் நுரையீரல்களை இயங்கவைத்து காற்றோட்டத்தைச் சீராக்குகின்றன. அத்துடன் இது மூளையிலிருந்து உடலுறுப்புகளுக்குச் செல்லும் நாடி நரம்பின் வேலைகளையும் நெறிப்படுத்துகின்றது.

புருவமத்தியில் உள்ளது ஆக்ஞை சக்கரம். இது சிரசிலுள்ள நாடி நரம்புகளைக் கண்காணிப்பதுடன் கண், நாக்கு, மூக்கு, செவி முதலியவற்றிலிருந்து வரும் செய்திகளை இணைத்து அவற்றிற்குரிய செயல் ஆணைகளையும் பிறப்பிக்க உதவுகின்றது. எனவேதான். இது ஆக்ஞை (ஆணை இடும்) சக்கரம் எனப்படுகிறது. சிவவாக்கியர் இந்த ஆறு ஆதாரங்களையும்,

- “முளரி ஆறு”[55]
- “ஆறு பங்கயம்”[56]

- “ஆறு மாநிலம்”[57]

என்றெல்லாம் குறிப்பிடுகின்றார்.

## மூன்று மண்டலம்

ஆறு ஆதாரங்களையும், சிவவாக்கியர் மூன்று மண்டலங்களைத் தொகுத்துக் கூறுகின்றார். மூலாதாரமும் சுவாதிட்டானமும் அக்கினி மண்டலம். அதற்கு மேல் உள்ள மணிபூரமும், அனாகதமும் சூரிய மண்டலம் ஆகும்.

அதற்கும் மேல் உள்ள விசுத்தியும், ஆக்ஞையும் சந்திரமண்டலம் ஆகும். இந்த மூன்று மண்டலங்களும் முள்ளந்தண்டில் உள் சுழுமுனை நாடியில் சேர்ந்துள்ளன. இதனை சிவவாக்கியர்,

- “மூன்று மண்டலத்தினு முட்டிநின்ற தூணிலும்..”[58]
- “வானிருந்த மதியமூன்று மண்டலம் புகுந்த பின்”[59]
- “தோன்றுமண்டலத்திலே”[60]

என்றெல்லாம் சுட்டிக்காட்டுகின்றார்.

## குண்டலினி

நமது உடலில் உணர்ச்சியும் சக்தியும் செயல்திறனும் நிறைந்து கிடக்கின்றன. எல்லாவிதமான உணர்ச்சிகளுக்கும் அடிப்படை இருப்பிடமாக அமைந்திருப்பது மூலாதாரமாகும். மூலாதாரம்தான் உணர்ச்சிகள் யாவும் சேகரித்து வைக்கப்பட்டிருக்கும் களஞ்சியம் ஆகும். இங்ஙனம் எல்லா உணர்ச்சிகளும் சக்தியும் அங்கு திரட்டி அடக்கிச் சுருண்டு குண்டலம்போல் வைக்கப்பட்டிருப்பதால்தான் அதற்குக் குண்டலினி சக்தி என்று பெயர். குண்டலினி என்பது விந்துவாகும்.[61]

இது உலக உற்பத்தியின்பொருட்டு, தக்க வயதில் ஆண் உறுப்பில் உற்பத்தியாகிறது. சுமார் எண்பது துளி குருதிகள் சேர்ந்து ஒரு விந்தணுவாக உருவாகும்.[62]

உணவு உண்ட மறுநாள் திப்பி நீங்கி அன்னரசமாகும். மூன்றாவது நாள் உதிரமாகும். நான்காவது நாள் மாமிசமாகும். ஐந்தாவது நாள், ஆறாவது நாள் மேதை ஆகும். ஏழாவது, எட்டாவது நாள் மஜ்ஜை ஆகும். இதற்கு மேல் இந்திரியமாகும்.[63]

இந்திரியமாகிய இந்த விந்து, தூய இரத்தத்தினின்றும் வடிகட்டப்படும் ஓர் அபூர்வப்பொருளாகும். இவ்விந்துவிற்கு, விந்தணு, சுக்கிலம், இந்திரியம், ஜீவசத்து, உயிர்த்துளி, உயிர்ஆற்றல், உடற்சாறு என்று பல பெயர்கள் உண்டு.

விந்து, உற்பத்திக்கு வித்தாக உள்ளதால், விந்துவைச் சித்தர் சிவவாக்கியர், வித்து[64] என்றே குறிப்பிடுகிறார். உற்பத்தி நடைபெறவேண்டுமானால், வித்து கீழ்நோக்கவேண்டும். முத்தி கூடவேண்டும் என்றால், வித்து மேல்நோக்கவேண்டும். வித்து இல்லாமல் மேல்நிலையும் இல்லை. கீழ்நிலையும் இல்லை. தச்சனைக் கொண்டுதான் குடியிருக்க அழகிய மாளிகை அமைக்கப்படுகிறது. ஆனால், அற்புதமான உடலாகிய இம்மாளிகையை அமைத்த தச்சன் எதுவெனில் அது விந்து ஆகும். எனவே, உடம்பினை உண்டாக்கிப் பெற்றது விந்து. அதாவது பெற்ற தாய் விந்துவாகும். ஆனால், காமவெறியின் காரணமாக, அரிய விந்துவை இழந்து எளிய இன்பம் கொள்கிறவன் பெற்ற தாயை விற்று அடிமை கொள்கிற பேதை என்று கடுமையாகச் சிவவாக்கியர் சாடுகிறார். அவ்வாறு சாடுவதுடன், சித்தியும் முத்தியும் அடைவதற்கு அடிப்படையாக இருக்கிற இந்த ஜீவசக்தி தீரத் தீர,

உடம்பு தளர்ந்து நலிந்து ஜீவனில்லாமல் போய் விடும்[65] என்று சிவவாக்கியர் எச்சரிக்கையும் விடுக்கிறார்.

வாசியோகப் பயிற்சியின்போது, சுக்கிலத்தைப்போல், பெண்களுக்கு சுரோணிதம் எனப்படும்.

பிராணாயாமப் பயிற்சியின் மூலம் குண்டலினியை எழுப்பும் வாசியோகம் பற்றிக் கூறுவதால், சித்தர்கள் தந்திரயோக நெறியைச் சார்ந்தோர் என்று கூறுவோரும் உளர்.[66]

## குண்டலினியை எழுப்பும் விதம்

நமது உடம்பில் அக்கினி இருப்பதால்தான் எப்போதும் சீரான வெப்பம் இருந்துகொண்டிருக்கிறது. தொடர்ந்து உட்கார்ந்து இருக்கிற இடம் சூடாக இருப்பதில் இருந்தும் தூங்கி எழுந்தபின் தரையில் வெப்பம் தெரிவதிலிருந்தும் உள்ளங்கைகள் இரண்டையும் ஒன்றோடொன்று விரைவாகத் தேய்த்தால் சூடாவதிலிருந்தும் உடம்பில் அக்கினி இருப்பது உறுதியாகிறது. சிவவாக்கியர் இதனை, மூலவனல், மூலவங்கி,தணல் என்றெல்லாம் குறிப்பிட்டுள்ளார்.

இந்த அக்கினி,

1. மூலாக்கினி
2. யோகாக்கினி
3. கோபாக்கினி
4. தீபாக்கினி (பசி)
5. தாபாக்கினி (காமம்)

என்று ஐந்து வகைப்படும். இவற்றுள் கோபாக்கினி, தீபாக்கினி, தாபாக்கினி ஆகிய மூன்றின்போதும் குண்டலினி சக்தி கீழ்நோக்கிப் பாய்ந்து விடயபோக

சிற்றின்ப விவாகாரங்களில் சிதறி விரயமாகிறது. ஆனால், மூலாக்கினி யோகாக்கினி இரண்டிலும் குண்டலினி சக்தி ஊர்த்துவ முகமாக மேல்நோக்கிப் பாய்ந்து பேரின்ப நிலையில் சேர்க்க உதவுகிறது.

சிவவாக்கியர், அக்கினி மண்டலத்தின் மூலாதாரத்திலிருந்து மூல அனலை எழுப்புவதற்கு நுட்பமான வழியினைக் கூறுகின்றார்.

“மூல வனலையே
மாருதத்தி னாலெழுப்பியே...”[67]

என்று கூறுகின்றார். உள்ளில் கூடியே வாசியைத் தொடர்ந்து நடத்தும்போது மூல அனலாகிய அக்கினி மேலும் வெப்பமடைகிறது. “அக்கினியின் வெப்பத்தால் செவ்வையாகத் தகிக்கப்படுகின்றதால், தூங்குகின்ற குண்டலினி சக்தி நன்றாய் விழிப்புடையதாகின்றது. தண்டத்தால் அடிபட்ட சர்ப்பத்தைப்போல, நிச்சுவாசத்தை செய்து நிமிர்ச்சி அடைகிறது. அதன்பின் பிலத்தில் பிரவேசித்த பாம்பைப்போல், சுழிமுனையிலுள் பிரவேசிக்கிறது.[68]

இங்கு, “நான்ற பாம்பின் வாயிலும்”[69] என்று குண்டலினிப் பாம்பினைக் குறிப்பிடுகிறார், சிவவாக்கியர்.

## மூலவினாத்தண்டு

முதுகந்தண்டின் நடுவில் ஓடும் சுசும்னாநாடிக்கு, சுழுமுனை நாடி என்றும் மேருதண்டம் என்றும் பெயர். இதனைத் தண்டுவடம் என்று உடலியாளர்கள் குறிப்பிடுகின்றனர். இது மூலாதாரம் முதல் புருவமத்தி வரை முதுகந்தண்டின் உள்ளில் கூடி அமைந்துள்ளது. ஆறு ஆதார கமலங்களுக்கும் இம்மூல வினாத்தண்டினையே அமைவிடமாகக் கொண்டுள்ளன. இதனை, சிவவாக்கியர்,

“முடிவு முத்திரைப்படுத்தி மூலவினாத் தண்டினால்”[70] என்றும்,

“விட்டலர்ந்த மந்திரம் வினாவதண்டி னூடுபோய்”[71]

என்றும் குறிப்பிடுகிறார்.

**சுழிமுனை**

சுஷூம்னாநாடியின் மேல்நுனியே சுழிமுனை ஆகும். மூக்கின்மேல் நுனியும், புருவங்கள் இரண்டும் சந்திக்கும் இடத்திற்கு முச்சந்திவீடு என்று பெயர். இதுவே ஆறாவது ஆதாரமாகிய ஆக்ஞை ஆகும். ஐந்தாதாரங்களுக்கு மேலே இது இருப்பதால் இதனைப் பஞ்சணை மேலிருக்கை"[72] என்றும் உருவகப்படுத்துவர். சைவர்களும் மங்கல மகளிரும் புருவத்தின் நடுவே குங்குமப்பொட்டும், வைணவர்கள் திருமண்ணால் இட்டுக்கொள்ளும் திருநாமமும் சுழிமுனையின் அமைவிடத்தையும் அச்சுழிமுனை அக்கினித்தன்மை வாய்ந்தது என்பதையும் உணர்த்துவனவாகும். இதனை,

"சுடரெழும்பும் சூச்சமும் சுழுமுனையின் பீட்சமும்"[73]

"சூட்சுமான கொம்பிலே சுழுமுனை சுடரிலே"[74]

என்று சிவவாக்கியர் பாடுகிறார்.

"நெருப்பறை திறந்த பின்னே நீயு நானு மீசனே"[75]

"காலமே யெழுந்திருந்து கண்கள் மூன்றி லொன்றினால்"[76]

எனும் பாடல் அடிகளால் சிவவாக்கியர் சுட்டுகின்றார். சுழிமுனைக்கு, 'நெருப்பறை' என்றும், 'நெற்றிக் கண்' என்றும், வேறு பெயர்கள் இட்டுக்காட்டுகிறார்.

1. ஆக்ஞை
2. லலாடம்
3. சிற்றம்பலம்
4. துரியமலை
5. திரிவேணி சங்கமம்
6. கண் புருவநடு

7. சூன்யபதவி

8. பிரம்ம ஆன்மா

9. பெருவழி

10. மயானம்

11. சாம்பவி மத்திய பாகம்

12. சிற்சபை

13. முக்கோணம்

14. குருபீடம்

15. அக்கினி குண்டம்

16. அக்கினி நேத்திரம்

17. ஞானக்கண்

18. நெற்றிக் கண்

19. ஞானநாடி

20. மூலநாடி

21. அடைத்திட்ட வாசல்

22. ஈசன் இருக்கும் வாசல்

23. ஊசிமுனை வாசல்

24. எல்லை வாசல்

25. ஒரு வாசல்

26. ஞானவாசல்

27. திருவாசல்

28. தில்லை வாசல்

29. நல்ல வாசல்

30. நான்ற வாசல்

31. பத்தாவது வாசல்

32. மகாமேரு

முதலிய பெயர்களால் சுழிமுனையை ஞானநூல்கள் குறிக்கின்றன.

உடம்பில் மொத்தம் ஒன்பது வாயில்கள் உள்ளன.

அவை,

1. கண்கள் - இரண்டு
2. காதுகள் - இரண்டு
3. மூக்கின் துளைகள் - இரண்டு
4. வாய் - ஒன்று
5. கருவாய் - ஒன்று
6. எருவாய் - ஒன்று

என மொத்தம் ஒன்பது துளை வாயில்கள் உள்ளன. அவை விம்பும்படி, பத்தாவது வாயிலான உள் நெற்றி வாயிலை வாசியோகமாகிய உள்முக ஊதற் பயிற்சியின் மூலம் திறந்து ஞானவாசலின் ஊடே சென்று எல்லை கண்டுவிட்டால், இனிப்பிறப்பில்லை"[77] என்பது சித்தர்கள் நல்கும் உறுதி முடிவாகும்.

அதனால்தான், சுழிமுனையை, நல்லவாசல்[78] ஞானவாசல்[79] எல்லை வாசல்[80] என்றெல்லாம் சிவவாக்கியர் குறிப்பிடுகிறார்.

## தீர்த்தமாடுதல்

இடகலை, பிங்கலை, சுழிமுனை ஆகிய மூன்று சுவாசநாடிகள் சமகதியில் சேருமிடமே, 'திரிவேணி சங்கமம்' எனப்படும் புருவமத்தியாகும். இத்திரிவேணி சங்கமமே புனித தீர்த்தம். இந்நதியில், 'வாசி' பிரவேசிப்பதுதான் 'தீர்த்தமாடுதல்' ஆகும். தம்முள்ளே இருக்கின்ற இப்புனித நீரில் நீராடத்தெரியாமல், வெளியில் கங்கை, காவிரி, கடற்கரை நீர்நிலைகள் என்று தேடி அலைந்து திரிகின்றனர். அகத்துள்ளே இவ்வாறு தீர்த்தமாடாமல், புறத்தே நீர்நிலைகளைத் தேடித் தீர்த்தயாத்திரை மேற்கொள்கிற மக்களைப் பார்த்து,

"தீர்த்த மாடவேணுமென்று தேடுகின்ற தீனர்காள்
தீர்த்த மாட லெவ்விடந் தெளிந்துநீ ரியம்புவீர்
தீர்த்தமாக வும்முளே தெளிந்துநீ ரிருந்தபின்"[81]

என்று கூவி அழைத்து உண்மையை உணர்த்துகிறார்.

**சோதி**

இறைவனை ஒளிமயமானவன் என்று அனைத்துச் சமயத்தாரும் போற்றுகின்றனர். அருளாளர்கள் பார்வையிலும் ஒளிவடிவாகவே இறைவன் திகழ்கின்றான். சோதியே சுடரே என்றெல்லாம் அன்பர்கள் பரம்பொருளைத் தொழுது ஏத்துகின்றனர். சிவவாக்கியரும், இறைவனை, ஒளிவடிவிலேயே போற்றுகின்றார்.

சுழிமுனை நாட்டத்தில் இலயமாகி, குண்டலினி சக்தியோடு கூடிய உணர்வால் கண்ணுங் கருத்துமாகக் கவனித்தால் சுவாசம் தானே அடங்கி, மனோலயம் உண்டாகும். அப்போது அங்கே உள்ளே விளக்கொளி தோன்றிவிளங்கும்.

காந்தவிளக்கில் (பெட்ரோமாக்ஸ்) காற்று அடித்து ஏற்றப்படுகிறது. அவ்வாறு காற்றடிக்கும்விசை இயக்கப்படும்போது, காற்றின் அழுத்தத் தினால், அவ்விளக்கின் அடிப்பாகத்தில் உள்ள மண்ணெண்ணெய் நுண்ணிய குழல் வழியாக மேலே ஏற்றப்படுகிறது. அது மேலே ஏறி, பற்றவைக்கப்பட்ட மாண்டிலில் ஒளியை உண்டாக்குகிறது. அதுபோல, உடம்பில் மேலிருந்து வாசியை நடத்தும்போது, அவ்வாசிக்காற்றினால் அடியில் உள்ள குண்டலினி சக்தி நுண்ணிய குழலாகிய சுகம்னா நாடி வழியாக மேலே ஏறி சுழுமுனையில் சோதியை உண்டாக்குகிறது. இறைவனாகிய, சோதி புண்டரீகம் என்னும் சுழுமுனையின் மத்தியில் உதித்து எழுவதை, சிவவாக்கியர்,

"புண்டரீக மத்தியில் உதித்தெழுந்த சோதியை"[82]

"மூலநாடி தன்னிலே முளைத்தெழுந்த சோதியை"[83]

என்று நுட்பமாகக் கூறுகிறார்.

"பயில்பவன் புருவநடுவான ஆக்ஞைச் சக்கரத்தில் ஒளியைக் காண்கின்றான்"[84]

"மனிதஉடம்பிலே பின்மூளையில் உள்ள பயனியல் கினான்ட் என்னும் சுரப்பியின் ஆற்றலும், முன் மூளையில் உள்ள பிட்டியூட்ரிகிளான்ட் என்னும் சுரப்பியின் ஆற்றலும் பொருந்தும்போது நீல ஒளி தோன்றுகிறது"[85] என்கிறார் மீ.ப.சோமு.

இன்றைய அறிவியல் அறிஞர்களும் இலக்கிய ஆய்வாளர்களும் கூறுகிற இந்த உண்மையை,

"நெத்திபத்தி லுளழுகின்ற நீலமா விளக்கினை"[86]

"நெற்றியிற் றியங்குகின்ற நீலமாம் விளக்கினை"[87]

என்று அன்றே வெளியிட்டுள்ளதை அறியமுடிகின்றது. மேலும், இறைவனாகிய சோதியைக் காண வழியும் கூறுகின்றார்.

குரு உபதேசித்த சிவயநம என்ற திருவைந்தெழுத்தையும் இறப்பதற்குமுன் அறிந்துகொண்டு வணங்கித் தியானம் செய்வதுவே இப்பிறவிப் பிணிதீர்க்கும் மருந்தாகும் என்பது சிவவாக்கியரின் உள உறுதிப்பாடாகும்.[88]

மேலும், வாசிப்பயிற்சியைப் பெற்றிருந்தும் குரு சொன்னபடி இயங்காமல் மாறுபடும் பேதைகளை இடித்துரைக்கின்றார்.

யோகிகள் பரிவுநரம்பு மண்டலத்தைத் தமது மனக்கட்டுப்பாட்டில் கொண்டு வந்து பீனியல் உறுப்பைத் தூண்டி ஒரு உள்ளொளியைக் காண்பது என்று உறுதிசெய்யப்படுகின்றது"[89]

இத்திருவிளங்குமேனியில் இறைவன் செஞ்சுடராய்க் காட்சி தருவதை,

- “முட்பொதிந்த தென்னிலே முருகிநின்ற செஞ்சுடர்”[90]
- “முந்தவோ ரெழுத்துளே முளைத்தெழுந்தசெஞ்சுடர்”[91]
- “முத்தியான வித்துளே முளைத்தெழுந்த செஞ்சுடர்”[92]

என்று சிவவாக்கியர் செப்புவதில் இருந்து விளங்குகின்றது.

**உச்சி**

“நச்சி வாயி லுச்சி நீலா”[93]

என்ற பாடலின்மூலம் சிவவாக்கியர் உச்சியைக் குறிப்பிடுகிறார். பிறந்த குழந்தைக்குத் தலையின் உச்சிப்பகுதியில் வட்டமான சிறு பள்ளம் இருக்கும். அப்பள்ளத்திற்கு உச்சிக்குழி, உச்சிப்பள்ளம் என்று பெயர். குழந்தையின் உச்சிப் பள்ளத்தில் நாடி துடிப்பது[94] நன்றாகத்தெரியும்.

இக்கருத்தை அகிலத்திரட்டு அம்மானை என்னும் நூல்,

அல்லும் பகலும் அமுதுடன் தூங்கினால் தவம் முதிர்ச்சியடைந்து உச்சிக்குழி திறந்துகொள்ளும். குழந்தைப்பருவத்தில் இருந்த பள்ளம் மீண்டும் ஏற்படுவது வியப்புத்தானே.

அப்பள்ளத்தினைத் தொட்டுப் பார்த்தால், கனிந்த மாம்பழத்தைத் தொடுவதைப்போல் நெளுக்கென்று இருக்கும். நாளாக, ஆக, அந்த உச்சிக்குழி உள்ளே பள்ளமாக இருக்கவே மேலே மண்டை ஓடு கெட்டியாகிப் பொருந்தி மூடிக் கொள்ளும். இந்த மண்டை ஓட்டிற்கும் மூளைக்கும் இடையில் குழியாய் இருந்த பள்ளம் இடைவெளியாகவே இருக்கும். முட்டையின் அகன்ற பகுதியின் ஓட்டினில் தட்டி உடைக்கும்போது, அந்த ஓட்டிற்கும், உள்ளேயிருக்கும் திரவப்பகுதிக்கும் மத்தியில் காணப்படும்,

இடைவெளி காற்றறை போன்றது இது. சிரசில் உள்ள இந்த இடைவெளிக்கு

1. சகஸ்ராரம்
2. உச்சி வெளி
3. உச்சிக் கண்
4. பிரமாந்திர முடிவு
5. பேரம்பலம்
6. பேரின்பவீடு
7. வெட்ட வெளி
8. இரவு பகல் அற்ற இடம்
9. பரதேசம்
10. சிதாகாசம்

முதலிய பலபெயர்கள் உண்டு. இப்பரதேசத்தில் பிரவேசித்துச் சஞ் சரிப்பவர்களே, பரதேசிகள் ஆவர்.

மூளையின் இம்மேல்தளமான ஆயிரந்தளங்கள்- வட்ட வீடு- ஆயிர இதழ் தாமரை- ஜீவமலர் என்று அழைக்கப்படுகின்ற இதனை,

- “அப்புறத்தில் வெளி கடந்த வாரியங்கள் சோதியை”[95]
- “மின்னியே வெளிக்கு நின்ற வேறிடத் தாமர்ந்ததும்”[96]
- “உச்சி கண்டு கண்கள் கட்டி உண்மை கண்டதெவ்விடம்”[97]
- “வீடு கண்டு கொண்டபின்பு வெட்டவெளி காணுமே”[98]
- “சென்னியான தளத்திலே சீவனின்றி லங்கிடும்”[99]
- “அந்திசந்தி யற்றிட மறிந்துணர்ந்து பாருமே”[100]
- “வட்டவீ டறிந்த பேர்கள் வானதேவ ராவரே”[101]
- “தச்சி வாயு லுச்சிமே லாயிருந்த வங்கலாய்”[102]

என்றெல்லாம் சிவவாக்கியர் தெளிவாகக் காட்டுகிறார். இதனையே பட்டினத்தார்

“உச்சிவெளியை உறுதியுடன் பாராமல்
அச்சமுடன் நான் அறிவிழந்தேன் பூரணமே”[103]

என்கிறார். குதம்பைச்சித்தர்,

“உச்சிமேற் சென்றங்கு யர்வெளியைக் கண்டார்க்கு

இச்சிப் பிங்கேதுக்கடி- குதம்பாய்

இச்சிப்பிங்கேதுக்கடி”[104] என்றும்,

“வெட்டவெளியை மெய்யென் றிருப்பார்க்குப்
பட்டய மேதுக்கடி- குதம்பாய்
பட்டய மேதுக்கடி”[105]

என்றும் உணர்த்துகிறார்.

## அகஒலிகள்

பொதுவான காலங்களில் ஏகாக்கிரசித்தம் ஏற்படும்போது, சில்வண்டின் ரீங்காரம் ஒலித்து நம்மை மூடிக் கொள்ளும். அப்போது ஓர் ஆனந்தப்பரவசம் ஏற்படும். மேலும் ஞானநிட்டையில் ஆழ்ந்து உடல் உலக நினைவுகள் அற்றுவிடும்போது, உடம்பில் சுவாசம் இயங்கும் நாதம் இரத்த ஓட்டநாதம், குடல்புரளும் நாதம், மூளை சலனநாதம் ஆகிய சத்தஜாலங்கள் இனிய நாதங்களாக எழுந்து ஒலிக்கும்போது, இன்பநாதமாக கந்தர்வ கானமாக-பரநாதத்தொலி ஆனந்த மயக்கம் தரும். இவ்வனுபவத்தை,

“கதிரதான காயகத்தில் கலந்தெழுந்த நாதமே”[106] என்றும்,

“பேசிடாதிருப்பிரேல் நாதம்வந் தொலிக்குமே”[107]

என்றும் சிவவாக்கியர் குறிப்பிடுகின்றார்.

அத்துடன் யோகிகளுடைய உயர்ந்த ஐந்துவாசல்களிலும் சிங்கநாத ஓசை முழங்கும் என்பதை,

"பங்குகொண்ட யோகிகள் பரமவாசல் அஞ்சிலும்
சிங்கநாத ஓசையும்"[108]

"பங்குகொண்ட சோதியும் பரந்தவஞ்செழுத்துமே
சிங்கநாத ஓசையும்"[109]

என்றும் சிவவாக்கியர் குறிப்பிடுகிறார்.

படுத்திருந்தாலும், அமர்ந்திருந்தாலும் நடந்துகொண்டிருந்தாலும் இடைவிடாமல் இந்நாதசங்கமாவது உள்ளில் ஒலித்துக்கொண்டே இருப்பதை,

"கிடக்கினு மிருக்கினும் கிலேவசந் திருக்கினும்
நடக்கினு மிடைவிடாத நாதசங் கொலிக்குமே"[110]

"முரண்டெழுந்த சங்கினோசை மூலநாடி யூடுபோய்"[111]

என்றெல்லாம் சிவவாக்கியர் வெளிப்படுத்துகிறார். இந்த அனுபவங்கள் அனைத்தும் உண்மை என்பதற்கு,

"வாயு பிரம்மரந்திரத்திற் செல்லும் காலத்து, சமுத்திரம், சக்கரம், மேகம், பேரிகை, தாரை, தப்பட்டை, என்பவற்றால் உண்டாகும் சப்தத்தைப் போன்ற நாதமும் பிராணன் பிரம்மரந்திரத்தின் மிகவும் ஸ்திரப்பட்டபின் மத்தளம், சங்கு, கண்டமணி, சாசனம் என்பவற்றால் உண்டாகும் சப்தத்தைப்போன்ற நாதமும், கிண்கிணி, வேணு, வீணை, தந்திரிவண்டு என்பனவற்றின் சப்தங்களைப் போன்ற நாதங்களும் இன்னும் நானாவித நாதங்கள் தேகத்தின் மத்தியில் உள்ளவனாகக் கேட்கப்படும்"[112] என்று கூறும் சிவயோக சாரம் சான்றாக விளங்குகின்றது.

"வணிகடல் யானை வளர்குழல் மே
மணிவண்டு தும்பி வளைபேரிகை யாழ்

தனிந்தெழ நாதங்க டாமவை பத்தும்”[113]

என்று நிஜானந்தபோதமும்,

“செயகண்டி சங்கினோசை காதில் கேழ்க்கும்

தியானிப்பார் சிலம்பொலிஇ னோசை கேட்கும்”[114]

என்று போகமுனிவர் சத்த காண்டமும் இவ்வனுபவத்தை உறுதி செய்கின்றன.

மேற்சுட்டப்பட்ட அகவொலிகள் (சப்தங்கள்)

1. கோஷம்
2. காம்யம்
3. கொம்பு
4. கண்டாமணி
5. வீணை
6. புல்லாங்குழல்
7. துந்துபி
8. சங்கநாதம்
9. மேக கர்ஜனை

போன்ற ஒன்பது விதங்களாகும் என்றும் அறியமுடிகின்றது.

## சித்திகள்

உரிய பயிற்சிகள்மூலம் சிதறும் சக்திகளைச் சேமிக்கும் மனிதன் நுட்பமான புலன் உணர்வுகளையும் மனித இயல்புக்கு மீறிய திறமைகளையும் அடைகிறான். இந்தச்சித்தத்தின் சேமிப்பு ஆற்றலே சித்தி எனப்படும். இதனை, சிவவாக்கியர்,

“முத்திசித்தி தொந்தமாய் முயங்குகின்ற மூர்த்தியை”[115]

என்று குறிப்பிடுகிறார்.

பிராணன் எங்குமுள்ள சக்தி. உடலின் பல இயக்கங்களுக்கும் இது அடிப்படையானது. மனத்தின் மாறுபாடுகளைப் போலல்லாமல் புத்தி உறுதியாய் இருப்பதற்கும்கூட, வாசியாம் பிராண சக்தியே காரணம் ஆகும். இதுபோல, வெளியே பிரபஞ்சத்தில் காணும் இயக்கங்களுக்கும்அதுவே அடிப்படை. இதனால், தன் உடலில் இருக்கும் பிராணனைஅடக்க முடிந்தவன், வெளியியங்கும் பிரபஞ்ச இயக்கங்களையும் அடக்க முடிந்தவன் ஆகிறான். எனவே, பிண்டப்படைப்பான தன் உடலை, ஆட்டிப்படைப்பது போலவே, அண்டப்படைப்பான, பிரபஞ்ச முழுமையையும் கூட ஆட்டிப்படைத்து அற்புதங்களைப் புரிகிறான்.

வாசியோகத்தின் மூலம் இடகலை, பிங்கலை, நாடிகளில் இயங்கும் வாயுவாகிய பிராணனை அபானனுடன் சேர்த்து, மகாவாயுவாக்கி சுஷூம்னாநாடியில் செலுத்தி ஒவ்வொரு ஆதாரமாக மேலேற்றிக் கொண்டு வந்தால் ஒடுக்கநிலைக்கு உயரலாம்.

**ஒடுக்கம்**

தீவிரமான இந்த அகமுகப்பயிற்சியின்மூலம் வெளிவிடும் 12 அங்குல சுவாசத்தை, ஒரு அங்குலம் குறைத்து, 11 அங்குலமாகவும், 2 அங்குலம் குறைத்து, 10 அங்குலமாகவும், 3 அங்குலம் குறைத்து, 9 அங்குலமாகவும், இப்படி உள்ளில் மேல்நோக்கி மூச்சை ஒடுக்கிஒடுக்கி இறுதியில் 12 அங்குலத்தையும் உச்சியின் உள்ளேயே ஒடுங்கச் செய்யும் சாதனையில் வெற்றி கொள்ளவேண்டும். இவ்வாறு சுவாசம் உள் ஒடுங்க ஒடுங்கக் கீழ்க்காணும் வண்ணம் ஒவ்வொருவிதமான அரிய ஆற்றல்கள் உண்டாகின்றன. மூச்சுக் காற்றானது, மொத்தம் பனிரெண்டு அங்குலம் உடையது. அதன் தன்மையில் இருந்து படிப்படியாகக் குறைவதால் ஏற்படும் பலன்களைக் குறிப்பிடும் பட்டியல் பின்வருமாறு.

| குறையும்போது | விளையும் பலன் |
|---|---|
| ஓர் அங்குலம் குறைந்தால் | இவ்வுலகத்திசையில் நின்று சுவாதீனப்படலாம். |
| 2 அங்குலம் குறைந்தால் | மனஆனந்தம், ஞானசெல்வம் உண்டாகும் |
| 3 அங்குலம் குறைந்தால் | விவேகம் உண்டாகும் |
| 4 அங்குலம் குறைந்தால் | தொலைவில் நடப்பதை இருந்த இடத்தில் இருந்தபடி கண்டு உரைக்கும் ஆற்றல் உண்டாகும். |
| 5 - 6அங்குலம் குறைந்தால் | ஆகாசத்தில் உள்ள அனைத்தையும் உணரலாம். |
| 7 அங்குலம் குறைந்தால் | அழியா உடம்பு (காயசித்தி) பெறலாம். |
| 8 அங்குலம் குறைந்தால் | அணிமாசித்திகளை அடையலாம். |
| 9 அங்குலம் குறைந்தால் | நவகண்டங்களில் சஞ்சரிக்கலாம். |
| 10 அங்குலம் குறைந்தால் | கூடுவிட்டுக்கூடு பாயலாம். (தேகம் விட்டு மறுதேகத்தில் பிரவேசித்தல்) |
| 11 அங்குலம் குறைந்தால் | தனது ஆன்மாவைக் கண்டு வசனிக்கலாம். |
| 12 அங்குலம் குறைந்தால் | மரணமிலாப் பெருவாழ்வு எய்தலாம். |

அதாவது, முற்றிலும் அடங்கும் சுவாசமானது, உதித்த இடத்திலேயே சுழன்று கொண்டிருக்கிறபடியால், அந்தப் பரமயோகி, நெடுங்காலம் அன்னபானாதிகளை நீக்கி, அவாவற்றிருப்பான்[116] என்பர்.

இவ்வரிய அனைத்து நுட்பங்களையும் அறிந்த சிவவாக்கியர்,

“பன்னிரெண்டு அங்குலம் சூரியகலையில் இருந்து வெளியேறும் காற்றைக் கும்பகம் செய்து நிறுத்தி, சிவயநம என்று மௌன பஞ்சாட்சரத்தை

ஐந்து வண்ணங்கள் கொண்ட திருப்பாதத்தில் ஏற்றுங்கள். அங்கு மின்னிய வண்ணம், நின்ற தீ உள்ளே சோதியாக அமர்ந்திருப்பதையும் அறியலாம்"[117] என்கிறார்.

மேற்சுட்டிய வகையில், எட்டுஅங்குலம் மூச்சுக் காற்றுக் குறையும்போது, அட்டமாசித்திகள் என்னும் எண்வகைப்பேறுகள் (அணிமாதிகள்) வந்தெய்தும்.

அவ்வாறு சுட்டப்படும் எண்வகைப்பேறுகளும் அவற்றின் விளக்கங்களும்பின்வருமாறு.

1. அணிமா - சிறிதாதல்- உடலைவேண்டும் வண்ணம் சிறிதாகச் சுருக்கிக் கொள்ளல்.
2. மகிமா- பெரிதாதல்- உடலை, மிகப்பெரிதாக ஆக்கிக் கொள்ளல்.
3. இலகிமா- இலேசாதல் - காற்றைப் போல இலோசாதல்.
4. கரிமா- கனமாதல் -மிகவும் கடினமாதல்,
5. வசித்துவம் - தன்வயமாதல்- எல்லாமே தம்வயப்பட்ட நிலை எய்தல்.
6. பிராப்தி- ஆளுதல்- அனைத்தையும் ஆளுதல்.
7. பிரகாமியம் - கூடுவிட்டுக் கூடுபாய்தல்- ஓருடல் விடுத்து மற்றோர் உடலில் புகுதல்.
8. ஈசத்துவம்- எண்ணியவாறெய்தல் - விரும்பியதைச் செய்து அனுபவித்தல்[118]

என்பனவாகும்.

**அமுதம்**

"சிரமுருக்கி அமுதளித்த சீர்உலாவு நாதனே"[119]

என்று சிவவாக்கியர் இறையைப் போற்றுகிறார். சிரமுருக்கி அமுதளிப்பது

என்பது வாசியால் ஏறிய குண்டலினி சக்தி சகஸ்ராரமாகிய பிரம்மரந்திரத்தைத் தட்டி வெப்பமாக்குகிறது. தக்க வெப்பம் உண்டானவுடன் அங்குள்ள அமுதகலசம் இளகி உருகுகிறது. உருகிய வெண்ணெய்போல் அது அண்ணாக்கின் வழியாக உள்ளே சொட்டத் தொடங்குகிறது. இங்ஙனம் இளகி, உருகிச் சொட்டும் இவ்வமுதத்திற்குப் பல பெயர்கள் உண்டு. அவையாவன,

1. நெய்
2. நரலை
3. அமுரி
4.அருளமுது
5. மேற்பாலமுது
6. மது
7. எண்சாண் பானங்கள்
8. அமுதபானம்
9. ஆகாசபானம்
10. சோமபானம்
11. சந்திராமிர்தம்
12. காயகற்பம்
13. அபூர்வ சஞ்சீவி,
14. காயாதபால்
15. கறவாப்பால்
16. மாங்காய்ப் பால்
17. சுக்கிலத்தேன்

ஆகியவனவாகும்.

சிவவாக்கியர், உள்ளூறும் இந்த அமுதினைத் தமது பாடலில்,

"ஈயிலாத் தேன்"[120]

என்று குறிப்பிடுகிறார். சிரசின் உச்சியில் இருந்து சுரந்துவரும் இவ்வமுதம் மேல் அண்ணாக்கைக் கடந்து தொண்டை வழியாகச் சொட்டுச் சொட்டாகத் தானே இறங்கும். இதனை அருந்துவோர் காயசித்தி அடைவர். உடம்பு பொன்னிறம் பெறும். மௌனம் கைகூடும். இதனைச் சித்தர் இடைக்காடர்,

"அண்ணாவின் மேல்வரும் பால்கற- பேர்
அண்டத்தில் ஊறிவரும் பால்கற"[121]

என்று பாடுகிறார். கணபதிதாசர்,

"காயாத பாலுண்டு ககனவம் பலத்தைக் கண்டு"[122]

என்று பாடுகிறார்.

"மாங்காய்ப் பாலுண்டு மலைமே லிருப்போர்க்குத்
தேங்காய்ப் பால் ஏதுக்கடி- குதம்பாய்
தேங்காய்ப் பால் ஏதுக்கடி"[123]

என்று குதம்பைச் சித்தர் குறிப்பிட்டுப் பாடுகிறார்.

இப்பாடல் அடிகளால் சுட்டப்படும், "மாங்காய்ப் பால்", மங்காத பாலாகிய அமுதம் ஆகும். தேங்காய்ப் பால் என்பது சீவன் உடலில் தேங்காமல் வெளியே போய்க் கொண்டிருப்பதைக் குறிக்கும்.[124]

இங்ஙனம், தொண்டை வழியாக இறங்கும் அமுதத்தை, நாக்கை உள்மடித்து, சுவைத்துப் பருகுவோர், எல்லையற்ற ஆனந்தத்தில் திளைப்பர். இதனை, சிவவாக்கியர்,

"நாக்கையூன்றி உள்வளைத்து ஞானநாடி யூடுபோய்"[125]

என்று குறிப்பிடுகிறார். அவ்வாறு அருந்தத் தொடங்கினால்,

"விருத்தரும் பாலராவார் மேனியும் சிவந்திடும்"[126]

என்று விளக்கம் அளிக்கிறார். அத்தகு மேனியானது,

"திருவிலங்க மேனியாகும்"[127]

என்பது அவர்தம் வாக்கு.

இதனையே வடலூர் வள்ளலாரான இராமலிங்க அடிகள்,

"விரைந்து விரைந்து படிகடந்தேன்
மேற்பால் அமுதம்- வியந்து உண்டேன்
திறைந்து நெகிழ்ந்த தோல் உடம்பு
செழும்பொன் உடம்பாய்த் திகழ்ந்தேனே"[128]

எனத் தம்மையே சான்றாக்கிக் காட்டுகிறார்.

போகமுனிவரோ,

"பொன்னாகும் நரைதிரையு மற்றுப் போகும்
போகாது சடலமது கல்த் தூ ணாகும்
மன்னா கேள் மூப்பதுவும் அகலும் பாரு
மைந்தனே வாலையது ஆவாய் நீயும்
பண்ணவே மூச்சதுவும் கீழே நோக்கும்
பாங்கான முனைமூக்குப் பிடரி தன்னில்
எண்ணவே மூச்சதுவு மேவும் பாரு
எழிலான சுழுமுனையும் மாருந் தானே"[129]

என்று பாடுகிறார். குணங்குடி மஸ்தானும்,

"கஞ்சா அபினியினைக் கற்பமென உண்ணாமல்
எண்சாண் பனங்கள் இறக்கி உண்ப தெக்காலம்?"

"வாசி வாவென்று வருந்தெள் ளமுதுண்டு
பேசிநான் வாழ்ந்தேன் பிழைதீர்வர தெக்காலம்?"[130]

என்று ஏங்கிப்பாடுவதையும் இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும்.

இவ்வமுதமே உணவும் ஆவதால், யோகத்தில் அமர்ந்திருப்பவர்க்கு, பசியோ, நீர்வேட்கையோ, களைப்போ, ஏற்படாது. எத்தனை ஆண்டுகள் அப்படியே அமர்ந்திருந்தாலும் வெளியில் இருந்து உணவோ, நீரோ, காற்றோ, வெளிச்சமோ எதுவும் பெற்றாக வேண்டிய தேவை அவர்களுக்கு இல்லை. தான்வேறு பரம்பொருள் வேறு என்ற விகல்பமாகிய வேறுபாடு நீங்கும். இங்ஙனம் இறைவனோடு இரண்டறக் கலந்து ஏகமாகிவிடுகின்ற நிர்விகல்ப சீவசமாதி நிலை கைகூடும். தோளுக்குமேலே சிரசினைச் சுற்றி ஞானஒளிவட்டம் சுழன்று ஒளிரும். இப்பெருநிலையைச் சிவவாக்கியர்,

"ஏகபோகமாகியே இருவரு மொருவராய்"[131] என்றும்,

"எந்தைப் பூரணப் பிரகாசர்"[132] என்றும்,

"பார்க்கப் பார்க்கத் திக்கெலாம் பரப்பிரம்மம் ஆகுமே"[133]

என்றும் பேரானந்தப் பெருநிலை எய்துதலை உணர்த்துகிறார்.

## சமாதி

சித்தர் மரபில் சமாதி என்பது நிறைநிலையைக் குறிக்கவரும் சொல்லாகும்.

சமம்+ஆதி= சமாதி என்று இச்சொல்லைப் பிரித்துப் பொருள் கொள்ளலாம். ஆதியாகிய பிரமத்திற்குச் சமமான நிலைக்கு மனிதன் உயர்ந்து விடுதல் என்ற ஆழ்ந்த பொருளுடையது இச்சொல். சமாதி என்பது ஒளிபடரும் குண்டலினியை உன்னி உணர்வால் எழுப்பிச் சுழுமுனையின் வழிதிறந்து உச்சிமுனையாகிய சிதாகாச அகண்டாகார வெட்டவெளியில் நிறைத்து பேரின்பப் பெருநிலையில் இலயிப்பது ஆகும். இந்நிலையில் கருவி கரணாதிகள் ஒடுங்கிவிடும். உலக உடல் வாதனைகள் அற்றுப்போகும். இவ்வுணர்வற்ற நிலையையும்,

"சித்தற்று சிந்தையற்று சீவனற்று நின்றிடம்
சத்தியற்றுச் சம்புவற்றுச் சாதிபேத மற்றுநன்

முத்தியற்று மூலமற்று மூலமந் திரங்களும்"[134]

அற்று ஒடுங்கும் நிலையினையும் சிவவாக்கியர் விளக்குகின்றார்.

சிவவாக்கியருக்கு, அளவில்லாமல் நின்ற தேஜோமயப் பொருளானது எங்கும் ஒரேவிதமாக எரிந்தது. தந்தையின் பரிபூரணப் பிரகாசமானது ஏகபோகமாகிய அவரை உயர்ந்த மோன சாகரத்தில் மூழ்கச் செய்தது. யாவராலும் நாடமுடியாத சந்திராமிர்தத்தை உண்டு, "நான் என்னும் அகங்காரம் அழிந்து ஆழ்ந்து ஒடுங்கினார்." தனது இந்த அனுபவத்தை,

"எல்லையற்ற பரம்பொருளே நமக்குள் சோதியாக நின்று ஏகமாய் எரிந்துகொண்டிருக்கிறது. அது எல்லாம் வல்ல பரிபூரணப் பொருளாகிப் பிரகாசம் பொருந்தி மிளிர்கிறது. அதில் நான் என்ற ஆணவம் அழிந்து நானே அதுவாகி நின்றேன்"[135] என்று சிவவாக்கியர் உரைக்கின்றார்.

மேலும்,கைகூடிய இந்த உயர்மோனப் பெருநிலையைச் சிவவாக்கியர்,

- "உட்கமலமோனம்"[136]
- "இலங்குமுச்சி மோனம்"[137]
- "பரந்துநின்ற மோனம்"[138]
- "தரித்திருந்த மோனம்"[139]

என்றெல்லாம் குறிக்கின்றார்.

அத்துடன்,

"ஞானம் பொங்கி நின்றது மவுனமே
உடம்பின் ஊமை எழுத்தாகி பொதிந்து நின்றது மவுனமே
உயிரில் தங்கி நின்றது மவுனமே
வாசியென்ற கதிக்குள் நின்றதும் மவுனமே

சந்திரனாகிய மதியம் மவுனமே
சிவன் இருந்த மோனத்தில் தியானியுங்கள்”[140]

என்றும் சிறப்புறச் செப்புகின்றார்.

“கேளப்பா கேசரமே அண்ட வுச்சி
கெட்டியாய்க் கண்டவர்க்கே மவுன மாகும்”[141]

என்ற காகபுசுண்ட முனிவரின் வாக்கும் இதனை வலியுறுத்துகிறது.

“பாயு மீராறு காலைப் பாயாது
பக்குவம் பண்ணுவது சமாதி”142

“ஓவியம் போலிருந் துள்ளுருகு நல்லமிர்தம்
ஒழுக வுண்பது சமாதி”[143]

“நிலையம்விட் டகலாது நீவாத தீபமென
நிலையி னிற்பது சமாதி”[144]

என்று மேன்மேலும் சிவவாக்கியர் விளக்குகின்றார்.

“மனதாவது, சடப்பொருள்களில் இருந்து விலகிக் கொண்டு ஆத்மசொரூபத்தில் இலயமாகுங்கால், அந்நிலை சமாதிஎன்று சொல்லப் படுகின்றது.”[145]

“மனஇயக்கம், உடல் இயக்கம் இரண்டும் நின்றுவிட்டபின், உடலிலேயே உயிர் அடக்கம் பெற்று இருக்குமானால், அதனை சீவசமாதி என்றும், மரணமிலாப் பெருவாழ்வு என்றும் முன்னோர்கள் கூறியிருக்கின்றார்கள்.”[146]

இங்ஙனம், ‘தற்போதம் இழந்த அகண்டாகார சிவானுபூதி அடைந்து எல்லாமாகி ஏகமாகும் நிர்விகற்ப சமாதியே இனிப்பிறவா முத்திப்பதம்’ என்பதைச் சிவவாக்கியர்,

"முத்தி சித்தி தொந்தமாய் முயங்குகின்ற மூர்த்தி"[147]

என்பதுடன், பிறவாத பூசை என்றும் குறிப்பிடுகிறார்.

"மெத்ததீப மிட்டதில் பிறவாத பூசை யேத்தியே"[148]

இதுபோழ்து அமரநிலை அமையும் என்பதை,

"ஆசையால் மறக்கலா தமரராக லாகுமே"[149]

என்றும் உறுதி கூறுகிறார். இம்மேலான நிலையை எய்தியவர்கள் எத்தனை ஆயிரம் ஆண்டுகள் வேண்டுமானாலும் அழியாது இருப்பர் என்பதைச் சிவவாக்கியர்,

"உய்யடர்ந்து கொண்டுநீங்கள் ஊழிக்காலம் வாழ்விரே"[150]

என்றும் அறுதியிட்டு உரைக்கிறார்.

"ஈராறு கால்கொண்டு எழுந்த புரவியை
பேராது கட்டிப் பெரிதுண்ண வல்லிரேல்
நீராயிரமும் நிலத்தா யிரத் தாண்டும்
பேராது காயம் பிரான்நந்தி ஆணையே"[151]

என்று திருமூலர் கூறுவது ஈண்டு நினைவிற் கொள்ளத்தக்கதாகும்.

## தத்துவம்

தத்துவநிலை என்ற சொல் ஆன்மா, இறைத்தன்மை எய்துதல் ஆகிய பரம்பொருள் அனுபவம் ஆகும்"[152]

உலகியலில் தெளிந்து துறந்து சித்தராயினாரின் தத்துவங்கள் அனைத்தும் சிவவாக்கியர் பாடலில் இடம்பெற்றுள்ளன.

## பஞ்சபூதங்கள்

சித்தர் மரபில் பஞ்சபூதங்கள் மிகக்குறிப்பாகப் பேசப்படுகின்றன.

“பஞ்ச பூதங்களின் சேர்க்கையே அனைத்தும். பஞ்ச பூதங்களான நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் இவற்றில் ஆண்டவன் உறைந்திருக்கிறான் என்ற கருத்தை, சிவவாக்கியர், ‘இவ்வுலகில் பஞ்சபூதங்கள் பூமியில் ஐந்து வகைநிலங்களாகவும், நான்குவகை நீராகவும், மூன்று வகை அக்கினியாகவும், இரண்டு வகைக் காற்றாகவும், ஆகாயவெளியாகிய ஒன்றாகவும் அமைந்து வேறு வேறு தன்மையாய் இருக்கின்றது. அதுவே, அஞ்செழுத்தாகி, அதில் சிகாரமாகி நீ நிற்கிறாய்”[153] எனவும்,

‘இவ்வுடலில் அஞ்செழுத்தாக ஈசன் பஞ்சபூதங்களாய், ஆகாயம் அந்தரத்தில் மனம் ஒன்றாகவும், காற்று இரண்டாகவும், அக்கினி மூன்றாகவும், நீர் நான்காகவும், மண், எலும்பு, தசை, ரோமம் என்ற ஐந்தாகவும் உள்ளது. பஞ்ச பூதங்களிலும் இறைவன் ஐந்தெழுத்தாகப் பரவி அமர்ந்துள்ளான்’[154] எனவும் தெரிவிக்கிறார்.

‘நீரிலே பால் கலந்தால், அது எப்படி நீரில் முழுவதும் பரவி நிற்கிறதோ, அப்படி இறைவன் பிரபஞ்சத்தில் கலந்து நிற்கிறான்’[155] எனத் திருமூலர் தெரிவிக்கிறார்.

## ஐந்தெழுத்து

பஞ்சபூதங்களும்கூட, ஐந்தெழுத்தின்மூலம் படைக்கப்பட்டவை யேயாகும் என்பது சித்தர்களின் துணிபு. அதாவது,

| | | |
|---|---|---|
| ந | என்ற எழுத்து | நிலத்திற்கும் (மண்) |
| ம | என்ற எழுத்து | நீருக்கும் (நீர்) |
| சி | என்ற எழுத்து | நெருப்புக்கும் (தீ) |
| வ | என்ற எழுத்து | காற்றுக்கும் (வளி) |
| ய | என்ற எழுத்து | ஆகாயத்திற்கும் (விண்) |

உரியனவாக அமைகின்றன.

“அஞ்செழுத்தில் ஐம்பூதம் படைத்தவன்”[156]

எனத் திருமந்திரம் கூறும். இத்தன்மையாகவே, மனிதஉடம்பும் ஐந்தெழுத்தின் மூலமே படைக்கப்பட்டது என்ற தத்துவத்தைச் சிவவாக்கியர்,

‘பஞ்சாட்சரம் நமது உடம்பில் நகாரம், இடுப்பிலிருந்து கால்கள் வரையிலுமாகவும், மகாரம், வயிறாகவும், சிகாரம் நெஞ்சிலிருந்து இரண்டு தோள்களாகவும் வகாரம், தொண்டை வாயாகவும், யகாரம் இரண்டு கண்களாகவும் அனைவருக்கும் அமைந்துள்ளது என்பதை ஓவியம் போல அமைத்துக் காட்டியுள்ளார்.[157]

அதாவது,

| | |
|---|---|
| ந | இடுப்பில் இருந்து கால்கள் வரை |
| ம | வயிறு |
| சி | நெஞ்சில் இருந்து இருதோள்கள் வரை |
| வ | தொண்டை வாய் |
| ய | இரு கண்கள் |

என்பதாகக் கொண்டமையும் ஓவியம் பின்வருமாறு அமையும்.

மேலும், சிவவாக்கியர் ஐந்தெழுத்தின் சிறப்புக்களை,

“அரியதோர் நமசிவயா மாதியந்த மானதும்
ஆரிரண்டு நூறுதேவ ரன்றுரைத்த மந்திரம்”[158]

என்றும் சிறப்பித்துக் கூறுகிறார்.

## எட்டும் இரண்டும்

ஆகாயமே மனமாகி, வெளியாகித் திகழ்கிறது. எட்டு இரண்டு எனும் அகார, உகார அட்சரத்தால், இதமாக இருத்தி, ஞானயோகத்தால் தியானித்தால் மனம் மெய்ப்பொருளாகிய ஈசன் இருப்பிடத்தை அடைந்து,இறைவனுடன் இரண்டறக் கலந்து ஆனந்தமாகிய பேரின்பம் அடையும்”[159] என்று சிவவாக்கியர் எடுத்துரைக்கின்றார்.

மேலும்,

"எத்தனை பேர் எண்ணினாலும் எட்டிரண்டும் பத்தலோ"[160]

என்ற பாடல்மூலம் எட்டும் இரண்டுமாகிய அகார உகாரத்தையும் தம்மில் அறிந்து பத்தாம் வாசலில் இருக்கும் ஈசனைப் பற்றி இருத்தல் வேண்டும் என்கிறார். அத்துடன்

"எட்டிரண்டும் கூடியே இலிங்கமான தேவனை
மட்டதாக உம்முளே மதித்துநோக்க வல்லிரேல்"[161]

என்னும் போது எட்டாகிய அகாரமும், இரண்டாகிய உகாரமும் கூடியே இலிங்கமாக ஆகியுள்ளது என்று தெளிவுபடுத்தியுள்ளார். இனி எட்டு என்பது பற்றி பின்வருமாறு விளங்கக் காணலாம்.

## எட்டு

ஒரு மனித உடலானது அணுக்களின் கூட்டமைப்பில் திடமானதொரு பொருளாக உள்ளது. இந்தத் திடமான பொருளே தூல தேகம் எனப்படுகிறது. இந்தத் தூல உடலானது எட்டுவிதமான அடுக்குகளை உடையதாகும். அவை,

1. உடலைச் சுற்றியுள்ள ஒளிகாந்த மண்டலம்
2. உரோம மண்டலம்
3. சதை மண்டலம்
4. சவ்வு மண்டலம்
5. தசை மண்டலம்
6. நரம்பு மண்டலம்
7. எலும்பு மண்டலம்
8. மாவு (மஜ்ஜை) மண்டலம்

ஆகியனவாகும்.

**இரண்டு**

வாயுவானது நாசி வழியாக உட்செல்வதையும் வெளிவருவதையும் புறச் சுவாசம் என்றும், உடலுக்குள் ஓடிக் கொண்டிருக்கும் வாயுவை உட்சுவாசம் என்றும் கொள்ள வேண்டும். ஆக, இந்த உட்சுவாசம், புறச்சுவாசம் என்பன இரண்டு. இவை இரண்டும் முற்கூறிய எட்டு அடுக்குகள் கொண்ட தூல உடலை இயக்க முழு மூலப் பொருளாகின்றன. எனவே.எட்டு அடுக்குகள் கொண்டதூல தேகமும், இரண்டு நிலைகள் கொண்ட பிராணமய கோசமுமே எட்டும் இரண்டும் ஆகும்”[162] என்பர்.

யோகத்தின்மூலம் இறைவனுடன் இரண்டறக் கலந்து ஆனந்தமாகிய பேரின்பம் அடைவதற்கு உரிய வழியாகச் சிவவாக்கியர் காட்டும் எட்டும் இரண்டும் என்பதற்கு இவ்விளக்கம் துணைபுரிகிறது. யோக ஞானத்திற்கு அடிப்படையாக இருப்பது ஓங்காரத்துள்ளிருக்கும் எட்டு, இரண்டு. இதற்கான விளக்கத்தைக் குறிக்காத சித்தர்களே இல்லை எனலாம்.

| எட்டு | இரண்டு |
|---|---|
| அ | உ |
| சிவன் | சக்தி |
| நாதம் | விந்து |
| உடம்பு | உயிர் |
| சூரியன் | சந்திரன் |
| வலக்கண் | இடக்கண் |
| பிங்கலை | இடகலை |
| அபானன் | பிராணன் |
| அமுரி | உபரி |
| அகண்டம் | உலகம் |
| அகாரம் | உகாரம் |

இவைபோல் இன்னும் பலவிதமாய்ச் சித்தர்கள் எட்டிரண்டு[163] என்பதற்கு விளக்கங்கள் அளித்துள்ளனர்.

**அகத்துளே இறைவன்**

இவ்வுலகில் உள்ள எல்லாப் பொருள்களிலும் கலந்து நிற்கும் இறைவன் உள்ளத்திலேயுமம் உறைகின்றான் என்று உறுதியாக நம்புபவர்கள் எதற்கும் அஞ்சமாட்டார்கள். காலன் வந்து கவர்ந்து செல்வானோ என்று எண்ணிக் கலங்கமாட்டார்கள் என்பதைச் சிவவாக்கியர்,

"ஆலம் உண்ட கண்டனார் அகத்துளே இருக்கவே
காலன்என்று சொல்லுவீர் கனாவிலும தில்லையே"[164]

என்று எடுத்துரைக்கிறார்.

**மெய்யறிவு**

உள்ளத்தை விரிவுபடுத்தித் தமக்குள் இருக்கும் உண்மைகளைக் கண்டறிய முயல்வதுதான் அறிவாகும். இதுவே மெய்ஞ்ஞானம் எனலாம். ஆனால், "ஞானநூல்கள் பலவும் தேடிப் படித்து ஞானப்பொருளானதில் நின்ற சோதியை சுழுமுனை நாடியில் தேடித் தியானிக்க வேண்டும். ஞானமாகிநின்ற ஓரெழுத்தாகிய மெய்ப்பொருளில் குருநாதனாக உள்ள ஈசனை அறிந்துகொண்டு அம்மெய்ப்பொருளைத் தவிர, வேறெதுவும் இல்லை என்பதுவே உண்மை என்று உறுதியாகக் கூறுகின்றார்.[165]

ஞானநூல்களைத் தேடிக்கொண்டு அதைப்பற்றிப் பேசிக் கொண்டிருப்பவர்கள் உண்மை ஞானத்தை அறியாமல் ஞானயோகிகள் என்று பேர் சூட்டிக் கொண்டிருப்பவர்களே ஆவர். அவர்கள் ஞானமாகிய சோதியை, பெருஞ்சுடரை- ஒப்பற்ற ஒளியை- உள்ளத்திலே இருப்பதைத் தேடிக் காணாமல் இருக்கிறார்கள் என்று குறிப்பிடுகின்றார்.

**பிறப்பதற்கு முன்**

பிறப்பதற்கு முன் உடம்பு நெருப்பிலும் உயிர் நீரிலும், ஆசை காற்றிலும் , அறிவு மூலாதாரத்திலும் இருந்தன என்பதைச் சிவவாக்கியர் தெளிவாக்குகின்றார்.[166]

உடல் உயிரின் மூலக்கூறுகள் பற்றி இதற்கு முன் சொல்லப்படாத செய்தியை இவர் குறிக்கிறார்.

## ஞானியர் இயல்பு

உண்மை ஞானியர் உறங்கினாலும் விழித்தாலும் உணர்வு சென்று அறிவில் ஒடுங்கி இருந்தாலும் சிறந்த ஐம்புலன்களையும் அடக்கி எல்லாத்திசைகளும் ஒன்றென ஒன்றி இருந்தாலும் புறத்திலும் உள்ளிலும் மெய்ப்பொருளோடே பொருந்தி இருப்பர்"[167] என்றும்,

மெய்ஞ்ஞானியர் தண்ணீரிலேயே முளைத்து வளர்ந்த தாமரை இலையானது, நீரோடு கூடி நின்றாலும் நீர் ஒட்டாத தன்மைபோல் ஞானியர் இவ்வுலகில் அனைத்திலும் கூடி நின்றும் எதுவும் பற்றாத தன்மையோடு இறைவனை நினைத்தவண்ணமே இருப்பர்[168] என்றும் சிவவாக்கியர் விளக்குகின்றார்.

## உடற்பற்றழிதல்

சிவவாக்கியர் உடலில் இருந்து உயிர் பிரிந்து இறப்பு நேர்ந்தபின் ஆகும் நிலைமையை,

- "நடுவன் வந்தழைத்தபோது நாறுமிந்த நல்லுடல்"[169]
- "ஓடுபெற்ற தவ்விலை பெறாது காணு முடலுமே"[170]
- "ஆடுபெற்ற தவ்விலை பெறாதுகாணு மிவ்வுடல்"[171]
- "நன்கலம் கவிழ்ந்தபோது நாறுமென்று போடுவார்"[172]

என்று உடலின் இழிவை எடுத்துரைக்கிறார்.

அதேநேரத்தில், உயிருடன் வாழும் காலத்தில் உரிய முறையில் முயன்றால்,

“காயமான பள்ளியிற் காணலா மிறையையே”[173]

என்று உடம்பின் சிறப்பையும் உரைக்கின்றார்.

மந்திரம்

மன்+த்ர (Man+tra) எனப்பிரித்து மனத்தின் எல்லையில் இருந்து விடுவிப்பது என்பது இதன் பொருளாகும்.[174]

மந்திரத்தின் மேல் மட்டற்ற ஆர்வம் கொண்டுள்ளனர் மக்கள். மதுக்குடியில் எவ்வளவு வெறி வைத்துள்ளனரோ, அவ்வளவு வெறி மந்திரத்தின்மீதும் வைத்துள்ளனர். மந்திரம் என்ன மரத்தில் ஊறிய கள்ளாகவோ உள்ளது? மந்திரம் என்பது மூலநாடியில் வாயுவை முறைப்படி செலுத்தி நிலைபெறுவதேயாகும். அந்த மந்திரம் கைவரப் பெற்றவர்க்கு மரணம் என்று ஒன்று இல்லை”[175] என்று கூறுகிறார்.

அதாவது வாசியோகமே மந்திரமாகும்.பிற மந்திரங்கள் மெய்யானவை அல்ல என்பது சிவவாக்கியர் கருத்தாகும்.

## குறிக்கோள்

இறைவனோடு ஆன்மா, இரண்டறக் கலக்கும் நிறைநிலையாகிய சாயுச்சியமே குறிக்கோள் என்பதை,

“தெளிந்த ஞானம் நான்கினும் சேரலாஞ்சா யுச்சியமே”[176]

என்கிறார். இதனை,

இறைவனோடு ஆன்மா ஒன்றுபடும் நிலை என்பதை வருணிக்கிறார் அலைன்டேனியல்.[177]

## ஐம்பத்தோர் அட்சரம்

“ஆகமம் நிறைந்து நின்ற வைம்பத்தோ ரெழுத்துமே”[178]

என்கிறார் சிவவாக்கியர். ஆறு ஆதாரங்களும் ஐம்பத்தோர் அட்சரங்களும் தொடர்புடையன. இவ்வாறு ஆதாரங்களிலும் குண்டலினி, பொருந்தும்போது ஓசை எழும். அவ்வோசையின் சுருங்கிய வடிவமாகச் சில எழுத்துக்கள் கருதப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| மூலாதாரத்தில் | ஓம் | 4 |
| சுவாதிட்டானம் | ந | 6 அ-ஐம் |
| மணிபூரகம் | ம | 10 இ-லிகம் |
| அநாகதம் | சி | 12 உ- சௌம் |
| விசுத்தி | வ | 16 எ-ரிம் |
| ஆக்ஞை | ய | 3 ஒ-ஹ்ரீம் |
| சகஸ்ராரம் | | 51 179 |

இவ்வெழுத்துக்களுக்கு மேலே காட்டியவண்ணம் எண்களும் தரப்படுகின்றன. ஒவ்வோர் அறையில் வரும் எழுத்துக்களுக்கு உரிய எண் இட்டுச் சுட்ட ஒவ்வொரு வரிசையிலும் ஐம்பத்தோர் எழுத்துக்கள் வருவது காணலாம் என்பது இதன் விளக்கமாகும். டாக்டர் இரா.மாணிக்கவாசகம் தரும் விளக்கம் இச்சிறப்பை இன்னும் நுட்பமாகப் புரிந்துகொள்ள உதவுகிறது.

ஆதாரங்களின் இதழ்களில் ஏற்படும் 51 அதிர்வுகளே 51 ஒலிகள். அவற்றின் வரிவடிவங்களே 51 அட்சரங்கள். அவ்வொலிகளின் அட்ரசங்கள் கீழ்வருவன.

| | | |
|---|---|---|
| அ முதல் ஔ வரை | - | 12 |
| க வரிசை | - | 4 |
| ங வரிசை | - | 1 |
|ச வரிசை | - | 1 |
| ஞ வரிசை | - | 4 |
| ட வரிசை | - | 1 |
| ண | - | 1 |

| | | |
|---|---|---|
| த வரிசை | - | 4 |
| ந | - | 1 |
| ப வரிசை | - | 4 |
| ம | - | 9 |
| ய | - | 9 |
| ர | - | 9 |
| ல | - | 9 |
| வ | - | 9 |
| ழ | - | 9 |
| ற | - | 9 |
| ன | - | 9 |
| ஹ | - | 5 |
| ஷ | - | 5 |
| ஜ | - | 5 |
| ஸ | - | 5 |
| க்ஷ | - | 5 |
| | | 50+ஓம்= 51[180] |

"இருக்கலா மிருக்கலா மவனியிலே யிருக்கலாம்"[181]

"உய்யடர்ந்து கொண்டு நீங்க ணூழிக்காலம் வாழ்விரே"[182]

"மந்திரத்தை யுண்டவர்க்கு மரணமேது மில்லையே"[183]

என்றெல்லாம் சிவவாக்கியர் கூறும் கருத்துக்கள் சித்தர்களின் சீவசமாதி நிலைகளைக் குறிக்கும். இவை சித்தர் பீடங்கள் என்று அழைக்கப்படுகின்றன. சித்தர்பீடங்களே பின்னர் பெருங்கோயில்களாக உருவெடுத்துள்ளன. சித்தர்பெருமக்கள் சீவசமாதி கொண்டுள்ள தலங்களான அருள்மிகு சித்தர்பீடங்களை பாபாஜி பதினெண் சித்தர்யோகக் கோவை பாராயணப் பா[184] குறிப்பிடுகிறது.

| | | |
|---|---|---|
| தில்லை | - | திருமூலர் |
| அழகர்மலை | - | இராமதேவர் |
| அனந்தசயனம் | - | கும்பமுனி |
| திருப்பதி | - | கொங்கணர் |
| ஆரூர் | - | கமலமுனி |
| திருவரங்கம் | - | சட்டமுனி |
| கருவை | - | கருவூரார் |
| கூடல் | - | சுந்தரானந்தர் |
| எட்டுக்குடி | - | வால்மீகி |
| காசி | - | நந்திதேவர் |
| அரிசங்கரங்கோவில் | - | பாம்பாட்டி |
| பழனிமலை | - | போகநாதர் |
| திருப்பரங்குன்றம் | - | மச்சமுனி |
| இராமேசுவரம் | - | பதஞ்சலி |
| வைதீசுவரன்கோயில் | - | தன்வந்திரி |
| பொய்யூர் | - | கோரக்கர் |
| மாயூரம் | - | குதம்பர் |
| திருவருணையூர் | - | இடைக்காடர் |

சித்தர் பீடங்கள் 200 எனும் நூல் அண்மைக்காலச் சித்தர்களைக் குறிக்கின்றது.[185] அவையும் பின்வருமாறு.

| | | |
|---|---|---|
| திருச்செந்தூர் | - | சத்ருசம்காரசுவாமிகள் |
| இராசபாளையம் | - | திருசேமகுருநாதசுவாமிகள் |
| அருப்புக்கோட்டை | - | ஆத்மானந்த ராமசாமி |
| மதுரை | - | தலைவிரிச்சான் சாமிகள் |
| கீழப்பூங்குடி | - | மிளகாய் சுவாமிகள் |
| உலகம்பட்டி | - | சேவுகானந்த ஞானியார் |

| | | |
|---|---|---|
| இடையமேலூர் | - | சித்தர் மாயாண்டி சுவாமிகள் |
| சொக்கலிங்கபுரம் | - | சிவகுருநாத சித்தர் |
| பழனி | - | சாதுசாமிகள் |
| பழனி | - | ஈசுவரபட்ட சாமிகள் |
| திருமலைக்கேணி | - | காமாட்சி மௌனகுரு சாமிகள் |
| கசவனம்பட்டி | - | கோதிநிர்வாண மௌனசுவாமிகள் |
| கோதைமங்கலம் | - | மானூர் சுவாமிகள் |
| சேலம் | - | அப்பா பைத்தியம் சுவாமிகள் |
| புதுக்கோட்டை | - | உலகநாத சுவாமிகள் |
| தபசுமலை | - | தபசுமலை சுவாமிகள் |
| செம்பூதி | - | சிவந்திலிங்க ஏகம்மை சுவாமிகள் |
| பனையபட்டி | - | சாதுபுல்லான் சுவாமிகள் |
| தேனிமலை | - | பெருமானந்த சுவாமிகள் |
| கோட்டையூர் | - | எச்சில் பொறுக்கி ஆறுமுகம் சுவாமிகள் |

சிவமயம் கண்ட சித்தர்கள்[186] நூல் தரும் சித்தர்பீடங்கள் பற்றிய விவரங்கள் பின்வருமாறு.

| | | |
|---|---|---|
| சிங்கம்புணரி | - | சித்தர் முத்துவடுகநாதசுவாமிகள் |
| மதுரைகாதக்கிணறு | - | நடனகோபால சுவாமிகள் |
| நெரூர் | - | சதாசிவ பிரும்மேந்திரா |
| ஏரல் | - | சேர்மன் அருணாசலம் சுவாமிகள் |
| பூந்தமல்லி சித்துக்காடு | - | போடோ சித்தர்ஞானி |

**இன்னும் பிற சித்தர் பீடங்கள்**

புத்தூர் - சுரைக்காய்ச் சித்தர்

விளாத்திகுளம் ரெட்டியபட்டி-ரெட்டியபட்டிச் சித்தர்

| | | |
|---|---|---|
| கலசப்பாக்கம் | - | பூண்டிச் சித்தர் |
| புரவிப்பாளையம் | - | கோடிச்சித்தர் |
| அரகொண்டா | - | அரோகராச்சித்தர் |
| ஈத்தாமொழிக்கடற்கரை | - | கோம்பைச் சித்தர்[187] |

இவ்வாறாக, சித்தர் உலவும் தலங்களுக்குச் செல்வதும், சித்தர் பீடங்களைத் தரிசிப்பதும் சித்தர் நினைவுகளில் மூழ்குவதும் சித்தர்நெறியினைக் கைக்கொள்ள உதவிபுரியும். சமயநிலை நின்று சடங்குகளில் சிக்கிக் கைப்பொருள் இழந்தும், ஆன்மவலிமை குன்றியும் அல்லாடும் மக்களுக்கு சமயநிலை கடந்து வாழும் நெறியைப் புகட்டியவர்கள் சித்தர்கள் என்றால் மிகையாகாது. பிறப்பால் சைவராகி, ஒருமையுணர்வால் வைணவத்தையும் இணைத்து, சமயநெறி கடந்து யோகநெறிநின்று வழிகாட்டியவர் சித்தர் சிவவாக்கியர் என்பது இதன்வாயிலாகப் பெறப்படுகிறது.

## தொகுப்புரை

சிவவாக்கியர், மதவாதங்களைக் கண்டிக்கிறார்; விரதங்கள் வேண்டியதில்லை என்கிறார்.

எங்கள் தெய்வம், உங்கள் தெய்வம் என்று கூறுவது மடமை. தில்லைநாயகனும், திருவரங்கநாயகனும் ஒன்று என்னும் சைவ, வைணவப் பொதுமை பேணுகிறார்.

அவரது நோக்கில், யோகம் என்பது மனதை ஒருநிலைப்படுத்தி அகமுகமாக இறைவனைத் தம்முளே உணர்வதாகும்.

இறைவனை அடைவதற்குரிய படிநிலைகள் நான்கையும் அவற்றின் பயன்களையும் தனித்தனியாக மற்றவர்கள் சொல்லியிருக்க, சிவவாக்கியர் இன்ன இன்ன படிநிலைக்கு, இன்ன இன்ன பயன் பெறுவர் என்பதைப் பொருத்திக் காட்டியிருப்பது சிறப்பான முறையாக விளங்குகிறது.

வாசி என்பது உயிர்மூச்சு. வாசியோகம் என்பது உயிர்மூச்சை உள்மார்க்கமாக நெறிப்படுத்தி உயர்நிலையை அடைதலாகும். இது மூச்சுக்கலை பற்றிய நுட்பமான விளக்கமாகும்.

உடம்பில் மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய ஆறு ஆதாரங்களைச் சிவவாக்கியர் ஆறுதாமரைகள் என்றும் ஆறுமாநிலங்கள் என்றும் குறிக்கின்றார்.

இரண்டிரண்டு ஆதாரங்களை ஒவ்வொரு மண்டலம் எனக்கொண்டு முறையே, ஆறு ஆதாரங்களை மூன்று மண்டலங்களாகக் காட்டுகிறார்.

குண்டலினியைச் சிவவாக்கியர், 'வித்து' என்று குறிப்பிடுகிறார். குண்டலினிசக்தி என்பது, விந்துவின் சிறப்பு ஆற்றலாகும். இது போகத்தின்போது கீழ்நோக்கிப் பாய்ந்து சிற்றின்பம் ஆகிறது. யோகத்தின்போது மேல்நோக்கி ஏறிப்போய்ப் பேரின்பம் பயக்கிறது.

மூலவினாத்தண்டு என்பது முதுகுத் தண்டு ஆகும். ஆறு ஆதாரங்களும் இம்மூல வினாத்தண்டுகளையே அமைவிடமாகக் கொண்டுள்ளன. மூலவினாத்தண்டின் நடுவில், கீழிருந்து மேலாக அமைந்துள்ள மெல்லிய நுண் குழல், 'சுசும்னாநாடி' எனப்படும். சுழிமுனை என்பது மூக்கின் மேல்நுனியும் புருவங்கள் இரண்டும் சந்திக்கும் இடமாகும். இதனை, சிவவாக்கியர், 'மூன்றாவது கண்' என்றும், 'நெருப்பறை' என்றும் குறிப்பிடுகிறார்.

யோகமுறையைக் குருவிடம் நேரில் அறிந்துணர வேண்டும்.

நெற்றிக்கண் நாட்டத்தில் மனதை வைத்துக் குண்டலினி சக்தியோடு கூடிய உணர்வால், கருத்துடன் கவனித்தால் சுழிமுனையில் சுவாசம்தானே அடங்கி மனோலயம் உண்டாகும். அப்போது சிரசினுள்ளே 'செஞ்சுடர் சோதி' தோன்றித்திகழும். பலவிதமான நாத ஒலிகள் பரநாத ஒலிகள் எழுந்து இன்பம் தரும்.

மூச்சின் நீளம், உச்சிநோக்கி ஒடுங்க அட்டமாசித்திகள் எனப்படும் எண்பெரும்ஆற்றல்கள் சித்தியாகும்.

மூளைக்கு மேலேயும் மண்டை ஓட்டிற்குக் கீழேயும் உள்ள இடைவெளி உச்சியாகும். இதைச் சிவவாக்கியர், 'வெளி' என்றும், 'வட்டவீடு' என்றும் குறிப்பிடுகின்றார்.

வாசியால் ஏறிய குண்டலினி சக்தி இந்த உச்சி வெளியாகிய பிரம்ம ரந்திரத்தைத் தட்டி, வெப்பம் ஆக்குகிறது. தக்க வெப்பம் கிடைத்தவுடன் உருகி அமிர்தம் சுரந்து உள்ளில் இறங்கும். இவ் அமிர்தம் மாங்காய்ப் பால் எனப்படும்.

'சமாதி' என்பது, மூச்சு உள்ளில் முழுமையாய் ஒடுங்கி இவ் அமிர்த பானத்தை உண்டு, மரணத்தை வென்று, பேரின்பத்தில் இலயித்திருப்பதாகும். இம்மேலான நிலையினை எய்திய சித்தர்கள், எத்தனை ஆண்டுகள் வேண்டுமானாலும் உயிரோடு கூடிய உடம்பு அழியாது இருப்பர். 'ஊழிக்காலம் வாழ்வர்' என்பது சிவவாக்கியரின் கூற்றாகும்.

பெறற்கரிய இப்பேரின்பப் பெருநிலையினை அளிப்பது. யோகநெறியாகிய வாசியோகமும், அதனாலாகும் குண்டலினி யோகமுமாகும். எனவே, சிவவாக்கியர் உணர்த்தும் சித்தர்நெறி யோக நெறியே என்பது புலனாகின்றது.

பஞ்சபூதங்களின் குணங்களில் எல்லாம் இறைவனே நிறைந்து நிற்கிறான். மனித உடம்பு, நமசிவய என்னும் ஐந்தெழுத்தின் அமைப்பாகப் படைக்கப்பட்டுள்ளது. 51 அட்சரங்கள், ஆறாதாரங்களுடன் தொடர்புடை யன. மந்திரமாய், ஆகமமாய் நிறைவது 51 எழுத்து.

எட்டும் இரண்டும் என்பது அகரம், உகரம் என்பதுடன் எட்டு அடுக்குகள் கொண்ட தூல தேகமும், இரண்டு நிலைகொண்ட பிராமணகோசமும் ஆகும்.

மனத்தை ஒருமைப்படுத்தித் தன்னை அறிதலுக்கு முறைப்படுத்த வேண்டும்.

அகத்துள்ளே இறைவன் உறைகின்றான்.

உண்மை, அறிவு என்பது ஞானமாகிய சோதி- உள்ளத்திலே இருப்பதைக் கண்டுணர்வதேயாகும்.

பிறப்பதற்கு முன் உடம்பு நெருப்பிலும் உயிர்நீரிலும் ஆசை வாயுவிலும் அறிவு மூலாதாரத்திலும் இருக்கும்.

ஞானியர், உலகத்திலேயே வாழ்ந்து கொண்டிருந்தும் உலகோடு ஒட்டாதவர்கள்.

இறந்தபின் இழிவினை அடையும் உடம்பே உயிருடன் உள்ள காலத்தில் உரிய முறையில் முயன்றால் இறைவனைக் காணுதற்குரிய திருக்கோயிலாகத் திகழும்.

'மந்திரம்' என்பது மூலநாடியின் வாயுவை முறைப்படிச் செலுத்தி நிலைபெறுவதேயாகும். இறைவனோடு இரண்டறக் கலக்கும் நிறைநிலையாகிய சாயுச்சியம் பெறுவதே வாழ்வின் குறிக்கோளாகும். சித்தர் நெறி, யோகத்தை அடிப்படையாகக் கொண்ட நெறியாகும்.

## சான்றெண் விளக்கம்

1. Sisirkumar Ghose, Mysticism, p.24
2. Jitendranath Banergee, Cult- Syneretism Cultural Heritage of India Vol.iv, p.330
3. KamilV.Zvelebil- The poets of powers p.
4. திருமூலர், திருமந்திரம், பா.எண்.2066
5. நிர்மலா மோகன், தமிழ்ச்சித்தர் இலக்கியம், ப.132.
6. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.73.
7. மேலது, பா.எண்.12.
8. மேலது, பா.எண்.56.

9.மேலது, பா.எண்.55.

10.மேலது, பா.எண்.10.

11. மேலது, பா.எண்.5.
12. மேலது, பா.எண்.157.
13. மேலது,பா.எண்.447.
14. மேலது, பா.எண்.486.
15. டாக்டர் ப.சொ.காயாரோகணம், சித்தர் கண்ட செம்பொருள், ப.63.
16. இராம.சுப்பிரமணியநாவலர்(மான்மருகனார்), ஆதாரயோகம், ப.5.
17. Alain Damelou, Yoga- The method of Re-Integration, p.7.
18. மேலது, ப.6.

19, சுவாமி சிவானந்த பரமஹம்சர், சித்தவேதம், ப.342.

20. இரா.மாணிக்கவாசகம், நம்நாட்டுச்சித்தர்கள், ப.71.
21. இரா.நிர்மலாதேவி, கருவூரார் பல திரட்டு, ப.24.
22. நா.சுப்பிரமணியன், திருமூலர் திருநெறி, ப.71.
23. சிவானந்தபோதம், பா.எண்.79.
24. மேலது, பா.எண்.80.
25. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.239.
26. மேலது, பா.எண்.441.
27. மேலது, பா.எண்.479.
28. மேலது, பா.எண்.372.
29. மேலது, பா.எண்.244.

30. சுவாமிசிவானந்தபரமஹம்சர், சித்தவேதம், ப.290.
31. யோகிராஜ் வேதாத்திரி மகரிஜி, மனவளக்கலை, ப.27.
32. நெஞ்சறிவிளக்கம், பா.எண்.89.
33. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.155.
34. மேலது, பா.எண்.143.
35. காகபுசுண்டர், காகபுசுண்டர் ஞானம்-80, பா.எண்.69.
36. ஸ்வாமி, பிராணாயாமம், ப.99.
37. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.372.
38. சிவயோகசாரம், பா.எண்.
39. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.205.
40. மேலது, பா.எண்.232.
41. மேலது, பா.எண்.296.
42. மேலது, பா.எண்.323.
43. கி.வெங்கட்ராமன், யோகவேதம்,ப.210.
44. மேலவர், யுகங்கள் கடந்துவாழும் உன்னதக்கலை, ப.311.
45. சிவவாக்கியர், சிவவாக்கியம்,பா.எண்.372.
46. திருமூலர், திருமந்திரம், பா.எண்.553.
47. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.125.
48. சிவயோகசாரம், பா.எண்.
49. மேலது, ப.292.
50. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.172.
51. மேலது, பா.எண்.21.
52. மேலது, பா.எண்.155.
53. மேலது, பா.எண்.172.
54. அகத்தியர், அகத்தியர் ஞானம், பா.எண்.7.
55. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.372.
56. மேலது,பா.எண்.231.
57. மேலது, பா.எண்.373.
58. மேலது, பா.எண்.100.
59. மேலது, பா.எண்.108.
60. மேலது, பா.எண்.101.
61. இரா.நிர்மலாதேவி, கருவூரார் பல திரட்டு, ப.24.

62. மேலது, ப.86.
63. நிஜானந்தபோதம், பா.எண். ப.526.
64. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.17.
65. மேலது.
66. P.Jaya, Works of cittars and their places in Hindu Religious thought in Tamil Literature, p.406.
67. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.372.
68. சிவயோகசாரம், பா.எண். ப.291.
69. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண். 100.
70. மேலது,பா.எண்.327.
71. மேலது, பா.எண்.425.
72. யோகிராஜ் வேதாத்திரி மகரிஷி, மனவளக்கலை, ப.32.
73. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.338.
74. மேலது, பா.எண்.340.
75. மேலது, பா.எண்.127.
76. மேலது, பா.எண்.132.
77. மேலது, பா.எண்.512.
78. மேலது, பா.எண்.111.
79. மேலது.
80. மேலது.
81. மேலது, பா.எண்.65.
82. மேலது, பா.எண்.70.
83. மேலது, பா.எண்.473.
84. மா.கோவிந்தன், பாபாஜியும் பதினெண்சித்தர் கிரியா யோகமரபும், ப.176.
85. மீ.ப.சோமு, சித்தரிலக்கியம், ப.3.
86. சிவவாக்கியர், சிவவாக்கியம்,பா.எண்.166.
87. மேலது, பா.எண்.168.
88. மேலது, பா.எண்.203.
89. க.சுந்தரேசன், சிவலிங்கம்(எ) பீனியல் சுரபி, ப.72.
90. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.362.
91. மேலது, பா.எண்.430.
92. மேலது, பா.எண்.515
93. மேலது, பா.எண்.508.

94. ஆ.அரிசுந்தரமணி, அகிலத்திரட்டு அம்மானை, பாராயண உரை, ப.487.
95. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.373.
96. மேலது, பா.எண்.392.
97. மேலது, பா.எண்.393.
98. மேலது, பா.எண்.518.
99. மேலது, பா.எண்.507.
100. மேலது, பா.எண்.480.
101. மேலது, பா.எண்.390.
102. மேலது, பா.எண்.508.
103. அரு.இராமநாதன், சித்தர்பாடல்கள், ப.172.
104. மேலது, ப.172.
105. மேலது, ப.171.
106. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.173.
107. மேலது,பா.எண்.104.
108. மேலது, பா.எண்.171.
109. மேலது, பா.எண்.176.
110. மேலது, பா.எண்.265.
111. மேலது, பா.எண்.98.
112. சிவயோகசாரம், ப.300.
113. மேலது, ப.482.
114. போகமுனிவர், போகமுனிவர் சத்தகாண்டம், பா.61.
115. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.509.
116. சிவயோகசாரம், பக்.301-302.
117. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.392.
118. ஸ்வாமி, பிராணயாமம், பக்.142-143.
119. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.484.
120. மேலது, பா.எண்.253.
121. இடைக்காட்டுச்சித்தர், இடைக்காட்டுச்சித்தர் பா.எண்.112.
122. கணபதிசித்தர், பா.எண்.57.
123. குதம்பைச்சித்தர், பா.எண்.26.
124. டாக்டர் ஏ.ஆர். சாரங்கபாணி, சித்தர்நெறி, ப.46.

125. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.432.
126. மேலது, பா.எண்.5.
127. மேலது, பா.எண்.6.
128. சக்தியுகம் மாத இதழ், 06.12.1986, ப.35.
129. போகமுனிவர், சத்தகாண்டம், பா.எண்.65.
130. இளங்கம்பன், தத்துவக்குயில்கள், ப.81.
131. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.128.
132. மேலது, பா.எண்.502.
133. மேலது, பா.எண்.218.
134 மேலது, பா.எண்.46.
135. மேலது, பா.எண்.502.
136. மேலது, பா.எண்.362.
137. மேலது, பா.எண். 354.
138. மேலது, பா.எண்.312.
139. மேலது, பா.எண்.354.
140. மேலது, பா.எண்.341.
141. காகபுசுண்டர். காகபுசுண்டர்ஞானம்-80, பா.எண்.6.
142. குணங்குடி மஸ்தான் சாகிபு, திருப்பாடற்றிரட்டு, பா.எண்.1
143. மேலது,பா.எண்.2.
144. மேலது, பா.எண்.8.
145. சித்பவானந்தசுவாமி, ராஜயோகவிளக்கம், பக்.241-242.
146. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.46.
147. மேலது, பா.எண்.509.
148. மேலது, பா.எண்.419.
149. மேலது, பா.எண்.273.
150. மேலது, பா.எண்.63.
151. திருமூலர், திருமந்திரம், பா.722.
152. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.315.
153. மேலது, பா.எண்.23.
154. மேலது, பா.எண்.219.
155. ராஜாஜி- சோமு, திருமூலர் தவமொழி, ப.125
156. திருமூலர், திருமந்திரம், பா.எண்.166.
157. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.97.
158.மேலது, பா.எண்.1.

159. மேலது, பா.எண்.266.
160. மேலது, பா.எண்.504.
161. மேலது, பா.எண்.505.
162. கி.வெங்கட்ராமன், யோகவேதம், பக்.157-159.
163. நாராயணசாமி ஓம்சக்தி பாட்டுச்சித்தர், சித்தர்சிவவாக்கியரின் ஜீவிதமும் சிந்தனையும், ப.98
164.சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.16.
165. மேலது, பா.எண். 469.
166. மேலது, பா.எண்.170.
167. மேலது, பா.எண். 316.
168. மேலது, பா.எண். 315.
169. மேலது, பா.எண்.6.
170. மேலது, பா.எண். 26.
171. மேலது, பா.எண்.117.
172. மேலது, பா.எண்.80.
173. மேலது, பா.எண்.186.
174. டாக்டர் இரா.மாணிக்கவாசகம், திருமந்திர ஆராய்ச்சி, ப.111.
175. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.374.
176. மேலது, பா.எண்.447.
177. Alain Danielon, Yoga - The method of Re- Integration, p.7.
178. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.175.
179. ஆ.அரிசுந்தரமணி, அகிலத்திரட்டு அம்மானை, பாராயண உரை, ப.2
180. டாக்டர் இரா.மாணிக்கவாசகம், நம்நாட்டுச்சித்தர்கள், பக்.55-56.
181. சிவவாக்கியர், சிவவாக்கியம், பா.எண்.127.
182. மேலது, பா.எண்.64.
183. மேலது, பா.எண்.374.
184. டாக்டர் யோகி.எஸ்.ஏ.ஏ. ராமையா, பாபாஜி பதினெண் சித்தர் யோகக் கோவை பாராயணப்பா.
185. புலவர் சீ. சந்திரசேகரன், சித்தர் பீடங்கள்200, பக்.72.
186. கானமஞ்சரி சம்பத்குமார், சிவமயம் கண்ட சித்தர்கள், ப.199.
187. பெ.கணேஷ், சித்தர் பூமி, பக். 60-62.